

பார்லிமெண்ட் மாளிகை—மேலிருந்து ஒரு தோற்றம்

# நமது பார்லிமெண்ட்

ஆசிரியர்:
மா. அனந்தசயனம் அய்யங்கார்,
சபாநாயகர், லோகசபை, புதுடில்லி.

மொழிபெயர்த்தவர்:
அ. நடராஜன்.



மாக்மில்லன் அண்ட் கம்பெனி லிமிடெட்
பம்பாய் மதராஸ் கல்கத்தா லண்டன்
1958

இன்றைய, வருங்கால
இளைஞர்களுக்கும் யுவதிகளுக்கும்
இந்நூல்
சமர்ப்பிக்கப்படுகின்றது.

# முன்னுரை

பிரிட்டிஷ் ஆட்சிமுறையைப் பின்பற்றி இந்தியா பார்லிமெண்ட் ஆட்சிமுறையை ஏற்றுக்கொண்டுள்ளது; ஆங்காங்கே சில மாறுதல்கள் இருப்பினும் பொதுவாகப் பிரிட்டிஷ் முறையைப் பின்பற்றியதாகவே அது அமைந்திருக்கிறது. பார்லிமெண்ட் முறையை அனுசரிக்கும் குடியாட்சி வெற்றி பெற வேண்டுமெனின் சட்டமன்றங்களின் அலுவல்கள், அவற்றின பிரச்னைகள், அவை இயங்கும் முறை ஆகிய விவரங்களை வாக்காளர்களுக்கு எடுத்துக்கூற வேண்டியது இன்றியமையாததாகின்றது. பார்லிமெண்ட் முறை அரசாங்கத்தில் இறுதியாக நாட்டை ஆள்வோர் மக்களே ஆதலால், பார்லிமெண்ட் என்பது எதைக் குறிக்கின்றது, அதன் இலட்சியம் யாது, இலட்சக்கணக்கானவர்களின் ஆசைகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் எவ்வாறு அது ஆதாரமாய் விளங்குகின்றது என்னும் விவரங்களையும் அவர்களுக்கு விளக்கிச் சொல்லவேண்டும்.

இச்சிறு நூலை யான் எழுதியதன் நோக்கங்கள் இரண்டு: ஒன்று, நமது பார்லிமெண்ட்டின் பண்டைச் சரித்திரத்தையும் தற்போதைய வரலாற்றையும் இதைப் படிக்கும் சிறுவர்களுக்கு எடுத்துச் சொல்வது; மற்றொன்று, டில்லியிலுள்ள பார்லிமெண்ட் மாளிகையையும் வேறு பல வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த கட்டிடங்களையும் காண வருவோர்க்கு இது ஒரு வழித்துணை நூலாகவும் இருக்கவேண்டுமென்பது. இது விரிவான ஆராய்ச்சி நூலன்று; நிபுணர்களுக்காக எழுதப்பெற்றதுமன்று. பார்லிமெண்ட் நடைமுறைகளையும் பழக்க வழக்கங்களையும் பற்றிய சிக்கலான பெரிய நூல்களைப் படிக்க விரும்பாத சிறுவர் சிறுமியர்களுக்காகவே இது எழுதப்பட்டுள்ளது. பார்லிமெண்ட் சம்பந்தமான விவரங்களை எளிதாகப் புரிந்துகொள்வதற்காகவும் அதன் கதையைச் சுவைத்துப் படிப்பதற்காகவும் என்றே சம்பாஷணை நடை கையாளப்பட்டுள்ளது. டில்லியில் இருக்கும் பார்லிமெண்ட் மாளிகை, வேறு பல வரலாற்றுச் சின்னங்கள் ஆகியவற்றின் படங்கள் நூலில் இணைக்கப்பெற்றிருக்கின்றன; அவை பயனுள்ளனவாயிருக்கும் என நம்புகிறேன். இப்படங்களைக் கொடுத்து உதவிய இந்திய அரசாங்கத்தின் 'பத்திரிகைச் செய்தி ஸ்தாபன'த்தினருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

புதுடில்லி,
மார்ச 31, 1956

மா. அனந்தசயனம் அய்யங்கார்

# நன்றியுரை

இந்நூலை நான் ஆங்கிலத்தில் படித்தபோது இதன் பொருட் செறிவும் எளியநடையும் என்னைப் பெரிதும் கவர்ந்தன. இதைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டால் ஆங்கிலம் அறியாத தமிழர் அனைவருக்கும் பயன்படும் என்றும், பார்லிமெண்ட்டைப் பற்றிய நுட்பமான விவரங்களையும் அவர்கள் எளிதாக அறிந்துகொள்வதற்கு உதவிபுரியும் என்றும் கருதினேன். மொழிபெயர்ப்பதற்கான அனுமதி பெறுவதற்காக நூலாசிரியர் லோகசபை சபாநாயகர் ஸ்ரீ மா. அனந்தசயனம் அய்யங்கார் அவர்களை அணுகினேன்; உடனே அன்புடன் அனுமதியளித்த அவருக்கும், நான் மொழிபெயர்ப்பதற்கு இசைந்த மாக்மில்லன் கம்பெனியாருக்கும் எனது உளங்கனிந்த நன்றி உரியதாகும். இதை மொழிபெயர்க்கும்போது பல்வகையிலும் எனக்கு உதவி புரிந்த அன்பர்களுக்கும் ஊக்கமளித்த நண்பர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்.

இதில் பயன்படுத்தப்பட்டுள்ள கலைச் சொற்களைப்பற்றி ஒரு வார்த்தை. அரசாங்கத்தினர் வெளியிட்டிருக்கும் கலைச் சொற்கள் பட்டியலிலுள்ள சொற்களே பெரும்பாலும் உபயோகிக்கப்பட்டுள்ளன. எனினும், பார்லிமெண்ட், ஓட், கமிட்டி, காங்கிரஸ் போன்ற சில ஆங்கிலச்சொற்கள் மட்டும் அப்படியே கையாளப்பட்டிருக்கின்றன; ஏன் எனில், தமிழ் பேசும் மக்கள் அனைவரும் அவற்றை எளிதில் புரிந்துகொள்கின்றனர். அதுமட்டுமன்று, அவை தமிழ்ச் சொற்களாகவே இன்று கருதப்படுகின்றன.

திருப்பதி,
7-2-1958.

அ. நடராஜன்

# பொருளடக்கம்

# 1. நமது அரசியலமைப்பு

கேசவன் ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினர். ஒரு நாள் காலை தம் பங்களாவின் முன்பக்கத்து அறை யொன்றில் குடும்பத்தினருடன் தேனீர் அருந்திக்கொண் டிருந்தார். வேலையாள் ஒருவன் உள்ளே வந்து, தபால் காரன் அப்போதுதான் கொடுத்துவிட்டுச் சென்ற கடிதம் ஒன்றை அவரிடம் தந்தான். கேசவன் அதைப் பிரித்துப் படித்தார்.

"அது என்ன கடிதம்?" என்று வினவினாள் அவ ருடைய மனைவி நிர்மலா.

"அடுத்து நடைபெற விருக்கும் பார்லிமெண்ட் கூட்டத்திற்கு என்னை வரும்படி அழைக்கும் உத்தரவு." என்றார் கேசவர்.

"பார்லிமெண்ட் மறுபடியும் எப்போது கூடுகிறதாம்?" என்று கேட்டாள் நிர்மலா.

"இம்மாதம் இரண்டாவது வாரத்திலிருந்து பார்லி மெண்ட் கூட்டம் தொடங்குகின்றது. இன்றிலிருந்து ஏறக்குறையப் பத்து நாட்களுக்குள்ளாக," என்று விடை யளித்தார் கேசவன்.

"இம்முறையாவது எங்களையும் டில்லிக்கு அழைத்துச் செல்வீர்களா?" என்று கேட்டான் அவருடைய மகன் சேகர்.

"நீங்கள் மட்டும் அடிக்கடி டில்லிக்குப் போகின்றீர் கள்; ஆனால், ஒருமுறைகூட எங்களை அழைத்துச்சென்ற தில்லை," என்று குறைகூறினாள் அவருடைய மகள் லீலா.

"இம்முறை உங்களைக் கட்டாயமாக அழைத்துப் போகிறேன்," என்று கேசவன் உறுதி கூறினார்.



பார்லிமெண்ட் மாளிகை

"பார்லிமெண்ட் கட்டிடத்தை நான் படங்களில் பார்த்திருக்கிறேன். மிகப் பெரிய, வட்டவடிவமான கட்டிடம் அது, இல்லையா?" என்ருன் சேகர்.

"ஆம். உலகத்திலுள்ள மிக அழகான கட்டிடங்களில் அதுவும் ஒன்ருகும்," என்று பதிலளித்தார் கேசவன்.

"பார்லிமெண்ட் என்ருல் என்ன, அப்பா?" என வினவிஞள் லீலா.

"மக்களின் பிரதிநிதிகள் ஒன்றுகூடி, நாட்டை ஆள்வதற்குத் தேவையான சட்டங்களை நிறுவும் இடமே பார்லிமெண்ட் எனப்படுகின்றது," என்ருர் தந்தை.

"சட்டங்களை மக்களின் பிரதிநிதிகள் ஏன் இயற்ற வேண்டும்?" என்ருள் லீலா.

"ஏனெனில், நம் நாடு ஒரு குடியரசு நாடு. மக்களே மன்னர்கள்; தம்மைத்தாமே ஆண்டுகொள்கின்றனர். ஆனுல், எல்லோரும் நேரிடையாக அரசாங்கத்தில் இருக்க முடியாதல்லவா? எனவே, தங்கள் சார்பாகச் சட்டங்களை இயற்றவும் நாட்டை ஆளவும் தம்மிடையிருந்து சில

பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர்." என்று நிர்மலா விளக்கிக் கூறினுள்.

"பிரதிநிதிகளை அவர்கள் எங்ஙனம் தேர்ந்தெடுக் கின்றனர்?" என்று கேட்டாள் லீலா.

"சென்ற ஆண்டில் நம்மூரில் தேர்தல்கள் நடந் தனவே, நினைவிருக்கின்றதா?" என்ருர் கேசவன்.

"ஓ, நன்ருக நினைவிருக்கின்றதே! ஊரெங்கிலும் பலநாட்கள் ஊர்வலங்களும் கூட்டங்களும் நடைபெற்றன. கட்சி வாசகங்கள் எழுதப்பெற்றிருந்த பெரிய பெரிய அட்டைகளைத் தூக்கிக்கொண்டும், கட்சி வாசகங்களை உரத்த குரலில் ஆரவாரித்துக்கொண்டும், 'இந்த அபேட் சகருக்கு ஓட் அளியுங்கள், அந்த அபேட்சகருக்கு ஓட் அளியுங்கள்' என்று மக்களிடம் வேண்டிக்கொண்டும்



'ஓட்டு'ச் சாவடியில்

தொண்டர் பலர் தெருத்தெருவாகச் சுற்றி வந்தனர்,'' என்று சொன்னாள் லீலா.

''நீங்களும் ஓர் அபேட்சகராயிருந்தீர்கள். ஒவ்வொரு நாளும் பல கூட்டங்களில் சொற்பொழிவாற்றினீர்கள். இறுதியில், தேர்தல் நாளன்று அனைவரும் 'ஓட்' போடும் சாவடிகளுக்குச் சென்று, தத்தம் 'ஓட்' களைத் தங்களுக்கு விருப்பமான அபேட்சகர்களின் பெட்டிகளில் போட்டு விட்டு வந்தனர். உங்களுக்கு உயர்ந்த பட்ச எண்ணிக்கை 'ஓட்' கள் கிடைத்தன. நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்ப தாக அறிவிக்கப்பட்டது,'' என்று புகன்றான் சேகர்.

''நீ கூறியது சரிதான். ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை அத்தகைய தேர்தல்கள் நாடு முழுவதிலும் நடத்தப்படு கின்றன. தேர்ந்தெடுக்கப்பட்டோர் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் என்றழைக்கப்பெறுகின்றனர்,'' என்று தெளிவுறுத்தினார் கேசவன்.

''ஓகோ! ஆனால், சென்றதடவை எங்கள் மாமாவும் தேர்ந்தெடுக்கப்பட்டாரே, அவர் ஏன் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருக்கவில்லை? உங்களைப்போல் அவர் ஏன் அடிக்கடி டில்லிக்குச் செல்வதில்லை?''

''அவர் டில்லியிலுள்ள பார்லிமெண்ட்டின் அங்கத்தின ரல்ல; நமது ராஜ்ய சட்டசபையின் அங்கத்தினரே. நமது இந்தியா தேசம் மிகப் பெரிய நாடு என்பதும் ஏராளமான ஜனத்தொகையுடன் கூடியது என்பதும் உனக்குத்தான் தெரியுமே! டில்லி போன்றதொரு மையமான இடத்திலி ருந்துகொண்டு நாடு முழுவதையும் ஆள்வதும் மக்கள் அனைவரின் நலத்தைக் கவனித்துக்கொள்வதும் மிகச் சிரமம். எனவே, இந்தியா பல சிறிய ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு பார்லிமெண்ட்டும், அதாவது, சட்டமியற்றும் சபையும்

தனி அரசாங்கமும் உண்டு. இச்சபைகளின் அங்கத்தினர்களும் மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.''

''இச்சபைகளுக்கும் பார்லிமெண்ட்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன?''

''நாடு முழுவதற்குமாக இருப்பது பார்லிமெண்ட். எல்லா ராஜ்யங்களின் பிரதிநிதிகளும் அதில் இருப்பார்கள். ஆனால், ராஜ்ய சட்டசபையிலோ அந்தந்த ராஜ்யத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களே இருப்பார்கள்.''

''அங்ஙனமாயின் இருவகைச் சபைகள் இருக்கின்றன, இல்லையா?'' என்றான் சேகர்.

''ஆம். மேலும், பார்லிமெண்ட்டே இரண்டு சபைகளாலாகியது. ஒன்று, கீழ்ச்சபை அல்லது **லோக சபை**; இதுவே மக்கட் சபை எனப்படுகின்றது. மற்றொன்று மேல் சபை அல்லது **ராஜ்ய சபை** என்றழைக்கப்படுகின்றது. மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப் பெறுவது லோக சபை; நாடு முழுவதற்கும் அது பிரதிநிதியாக விளங்குகின்றது. ராஜ்யங்களிலுள்ள சட்டசபை அங்கத்தினர்களால் ராஜ்ய சபை தேர்ந்தெடுக்கப்படுகின்றது; எனவே, அச்சபைகளுக்குப் பிரதிநிதியாக அது உள்ளது.''

''பார்லிமெண்ட்டில் ஏன் இரண்டு சபைகள் இருக்க வேண்டும்?''

''ஏனெனில், நாட்டின் சட்டங்கள் மிக மிக முக்கியமானவை அல்லவா? ஆதலின், மிகுந்த கவனத்துடனும் ஆழ்ந்த யோசனையுடனும் அவற்றை இயற்றல் வேண்டும். ஒரே சபை போதுமான கவனமும் அக்கறையும் அளிக்காமற் போய்விடலாம்; அன்றியும், நீடித்து நிற்காத நிலைமைகளையோ, உணர்ச்சிகளையோ உடன் சமாளிப்பதற்காகச் சில சட்டங்களை அவசரமாக இயற்றிவிடலாம்.

சட்டங்கள் இங்ஙனம் ஆழ்ந்த யோசனையின்றி இயற்றப் படுவதைக் கட்டுப்படுத்தவே எல்லாப் பார்லிமெண்ட்டு களிலும் இரண்டாவது சபை ஒன்றை அமைத்தல் வழக்கம். பொதுவாக, இந்த இரண்டாவது சபையில் அனுபவம் மிகுந்த பெரியோர்களே இருப்பர்."

"அங்கத்தினர்கள் பார்லிமெண்ட்டில் என்ன செய்வார் கள்?" என்று கேட்டாள் லீலா.

"அவ்வப்போது கூடி, நாட்டைச் சீரிய முறையில் ஆள்வதற்கு என்னென்ன சட்டங்கள் தேவை என்பதைக் குறித்து அவர்கள் ஆலோசனை நடத்துவர். அன்றாட அரசாங்க அலுவல்களைக் கவனித்துக் கொள்வதற்கென, அவர்களிடையிருந்து ஒரு சிலர் நியமிக்கப்படுகின்றனர். இவர்கள் மந்திரிகள் அல்லது அமைச்சர்கள் என்றழைக் கப்படுகின்றனர். எல்லா மந்திரிகளும் சேர்ந்ததுதான் 'அரசாங்கம்' அல்லது 'மந்திரி சபை' எனப்படுகின்றது. மந்திரி சபை தனது அலுவல்கள் அனைத்திற்கும் பார்லி மெண்ட்டிற்குப் பொறுப்புள்ளது, அதாவது, பதில் சொல்லக் கடமைப்பட்டது. பார்லிமெண்ட்டிற்கு மந்திரிகளைப் பிடிக்க வில்லையெனில், அவர்களிடம் நம்பிக்கையில்லை எனக்கூறி, அவர்களை ராஜிநாமாச் செய்யும்படி செய்துவிடலாம்."

"பிரதம மந்திரியையும் பார்லிமெண்ட்தான் தேர்ந் தெடுக்குமோ?"

"ஆமாம். உண்மையில், பார்லிமெண்ட்டில் பெரும் பான்மை அங்கத்தினர்களைக் கொண்ட கட்சியின் தலைவர் அவரே. இங்ஙனம் பார்லிமெண்ட்டின் ஆதரவு அவருக் கிருப்பதால், அரசாங்கத்தை அமைக்கும்படியாகவும் அதற் குத் தலைவராய் இருக்கும்படியாகவும் ராஷ்ட்ரபதி அவரைக் கேட்டுக்கொள்கிறார். பிரதம மந்திரியே மற்ற மந்திரிகளை யும் பொறுக்கியெடுத்துக் கொள்கின்றார்; எனினும், இம்

மந்திரிகளேயும் ராஷ்ட்ரபதியே நியமிக்கின்ருர். சற்று முன் நான் கூறியவாறு, இம்மந்திரிகள் அனைவரும் சேர்ந்தது தான் 'மந்திரி சபை' எனப்படுகின்றது. ஒவ்வொரு மந்திரியும் அரசாங்கத்தின் ஒவ்வோர் இலாகாவிற்கும் பொறுப்பாக இருந்துகொண்டு, அவ்விலாகாவின் அன்ருட அலுவல்களேயும் கவனித்துக் கொள்ளுகின்ருர்."

"ராஷ்ட்ரபதி எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்ருர்?"

"பார்லிமெண்ட் அங்கத்தினர்களாலும் ராஜ்யங்களிலுள்ள சட்டசபை அங்கத்தினர்களாலும் அவர் தேர்ந்தெடுக்கப்படுகின்ருர். அப்பதவிக்கு அவர் தகுதியற்றவர் எனப் பார்லிமெண்ட் கண்டால், பதவியிலிருந்து அவரை நீக்கிவிடவும் அதனுல் முடியும். இவ்வாறு, பார்லிமெண்ட்டிலுள்ள மக்கட் பிரதிநிதிகள் மூலமாக, அதாவது, மக்களாலேயே அரசாங்கம் தேர்ந்தெடுக்கப்படுகின்றது. அரசாங்கம் மக்களுக்கு உத்தரவாதமுள்ளது, பொறுப்புள்ளது. ஆகவே, இறுதியில் மக்களே நாட்டை ஆள்கின்றனர் என்பது தெளிவாகின்றதல்லவா?"

"சரி. ஆனுல், ராஷ்ட்ரபதியோ, மந்திரிகளோ, பார்லிமெண்ட் அங்கத்தினர்களோ தேர்தலுக்குப்பின் மக்களின் கருத்துக்களே மதிக்காமல் அலட்சியம் செய்துவிட்டால் என்ன செய்வது?" என்று கேட்டான் சேகர்.

"அவர்கள் அலட்சியம் செய்யமுடியாது. ஏனெனில், ஐந்தாண்டுகளுக்குத்தான் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஐந்தாவது ஆண்டிற்குப்பின்னர், புதுத்தேர்தல்கள் மீண்டும் நடத்தப்பெறும். மக்களின் கருத்துக்களே யாராவது மதிக்காமற்போனுல் அவர்கள் அவரை அடுத்த தேர்தலில் தேர்ந்தெடுக்கமாட்டார்கள். மேலும், ராஷ்ட்ரபதியும் மந்திரிகளும் உத்தியோக காலத்தின்போது எப்போது வேண்டுமானுலும் பதவியிலிருந்து நீக்கப்பட்டுவிட

லாம். ராஷ்ட்ரபதி அரசியலமைப்பிற்கு முரணுக நடந்தால் தான் பதவியிலிருந்து அவரை நீக்கமுடியும். அப்போது, பெருங் குற்றச்சாட்டுக்கான நடைமுறை கையாளப்படு கின்றது. பார்லிமெண்ட்டுச் சபைகளில் ஏதாவதொன்று அவர்மீது குற்றச்சாட்டைத் தயாரிக்கும்; மற்ருெரு சபை நீதிபதியாக மாறி அவரை விசாரிக்கும். மந்திரிகளைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்ருல் வேறு ஒருகாரணமும் கூருது எதிர்க்கட்சியினர் நம்பிக்கை யின்மைத் தீர்மானம் ஒன்றைக் கொணர்ந்து பெரும் பான்மை அங்கத்தினர்களைக்கொண்டு அதை நிறைவேற்றி விட்டால் போதுமானது.''

''உண்மையில் இது நல்லதோர் ஆட்சிமுறையாகவே இருக்கின்றது'' என்று சேகர் புகழ்ந்தான்.

'''ஓட்' செய்யும் உரிமை மக்களனைவருக்கும் இருப் பதனுல் அவர்களே உண்மையில் ஆட்சிபுரிவோர் என்று சொல்கின்றீர்களே, தேர்தலில் எல்லோரும் 'ஓட்' செய்யலாமா?'' என வினவினுள் லீலா.

''நிச்சயமாகச் செய்யலாம். ஒவ்வொருவருக்கும் 'ஓட்' செய்யும் உரிமையுண்டு,'' என்று மொழிந்தார் அவள் தந்தை.

''ஆனுல், சென்ற தேர்தலில் நான் 'ஓட்' செய்ய வில்லையே?'' என்று குறைப்பட்டுக்கொண்டான் சேகர்.

''நானும்தான் 'ஓட்' செய்யவில்லை,'' என்ருள் லீலா.

''நீங்கள் மிகவும் சிறியவர்கள் அல்லவா? இருபத் தொன்று வயதிற்கு மேற்பட்டவர்களுக்குத்தான் 'ஓட்' உரிமை உண்டு.''

''நாங்கள் 'ஓட்' செய்வதை ஏன் அனுமதிக்கக் கூடாது?'' என்று கேட்டான் சேகர்.

''நீங்கள் சிறுவர்கள் அல்லவா? ஆகையால் 'ஓட்'

டைப் பெறுவதற்கும் அங்கத்தினராவதற்கும் அபேட்சகர் களுள் யார் தகுதியுள்ளவர் என்பதை உங்களால் தீர் மானிக்க முடியாது.''

"இருபத்தொன்று வயது ஆனவுடன் நாங்களும் 'ஓட்' செய்யலாமா ?''

"ஓ, நிச்சயமாகச் செய்யலாம்.''

"ஆனல், உங்களைப்போல நானும் ஓர் அங்கத்தின ராகவே இருக்க விரும்புகிறேன்,'' என்று சொன்ஞன் சேகர்.

''நீயும் அங்கத்தினர் ஆகலாம். ஆனல், தேர்தலுக்கு நிற்பதற்குமுன் குறைந்த பட்சம் இருபத்தைந்து வய தாவது ஆகியிருக்கவேண்டும்,'' என்று புன்சிரிப்புடன் புகன்ருர் அவன் தந்தை.

''நானும் அங்கத்தினர் ஆக முடியுமா, அப்பா ?'' என வினவினள் லீலா.

''ஏன் முடியாது? இவ்விஷயத்தில் ஆணிற்கும் பெண்ணிற்கும் எத்தகைய வேறுபாடும் கிடையாது. உன் சகோதரனுக்கெதிராக நீ தேர்தலுக்கு நிற்கலாம். அவ னைத் தோற்கடித்தால் நீதான் அங்கத்தினராவாயேயன்றி உன் சகோதரன் ஆகமுடியாது,'' என்று விடை பகர்ந்தார் கேசவன்.

"வயது வந்தபிறகு அதைத்தான் நான் செய்யப்போகி றேன்,'' என்று கடைக்கண்ணுல் உடன்பிறந்தானை நோக்கியவண்ணம் லீலா மொழிந்தாள்.

"என்றைக்காகிலும் ஒரு நாள் ராஷ்ட்ரபதியே ஆவ தற்கு நான் முயற்சி செய்வேனே !'' என்ருன் சேகர்.

"அந்தத் தேர்தலிலும் உன்னைத் தோற்கடித்துவிடு கிறேன், பார்,'' என்ருள் லீலா, பிடிவாதமாக.

''பார்லிமெண்ட் முதன் முதலாக எப்போது, அப்பா,

ஏற்பட்டது?" என்று சேகர் பேச்சின் போக்கைத் திருப்பினன்.

"அதைப்பற்றி இன்னொருநாள் சொல்லுகிறேன். இப்போது நான் அவசரமாக ஒரு கூட்டத்திற்குச் செல்ல வேண்டும்," என்று சொல்லிக்கொண்டே எழுந்தார் கேசவன்.

## வினக்கள்

1. பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்?
2. பிரதம மந்திரி எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்ருர்?
3. ராஷ்ட்ரபதி எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்ருர்?
4. பார்லிமெண்ட்டில் ஏன் இரண்டு சபைகள் உள்ளன?
5. தனித்தனி ராஜ்ய அரசாங்கங்கள் ஏன் இருக்க வேண்டும்?

## 2. நமது இந்தியா

சில நாட்களுக்குப் பின்னர், கேசவனும் அவரது குடும்பத்தினரும் தங்கள் சொந்த ஊராகிய திருவனந்த புரத்திலிருந்து டில்லிக்குப் புறப்பட்டனர். டில்லியைக் காணப்போகும் மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்தனர் குழந்தைகள் இருவரும். டில்லியைக் குறித்து அவர்கள் எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கின்றனர்; வரலாற்றில் படித்துமிருக்கின்றனர். மேலும், தேசத்தின் தென் பகுதியிலிருந்து வட பகுதிகளுக்கு நாடு நெடுகிலும் அவர்கள் செய்யும் நீண்ட, முதற் பிரயாணம் அதுவே.

"டில்லி போய்ச் சேர்வதற்கு எத்தனை நாள் நாம் பிரயாணம் செய்யவேண்டும், அப்பா? அது மிக்கத் தொலைவில் இல்லையா?" என்று சேகர் வினவினான்.

"ஆமாம். இங்கிருந்து ஏறக்குறைய இரண்டாயிரம் மைல் தொலைவு இருக்கும். நாம் இருப்பது கிட்டத்தட்ட நாட்டின் தென்கோடி; டில்லியோ மறுகோடியில் இருக்கின்றது. இங்கிருந்து டில்லி போய்ச்சேர்வதற்கு மூன்று பகலும் மூன்று இரவும் ஆகும்."

"எவ்வளவு பெரியது நம் நாடு!" என வியப்புடன் மொழிந்தாள் லீலா.

"ஆம். உலகத்திலுள்ள பெரிய நாடுகளில் ஏழாவதாகும் நம் நாடு. அதன் பரப்பளவு ஏறக்குறைய பதிமூன்று லட்சம் சதுரமைல்; அதன் அகலமோ கிழக்கிலிருந்து மேற்காக ஆயிரத்து எழுநூறு மைல்."

"நம் நாட்டின் ஜனத்தொகை எவ்வளவு, அப்பா?" என்று கேட்டாள் லீலா.

"முப்பத்தாறு கோடிக்கு மேற்பட்ட மக்கள் நம் நாட்டில் இருக்கின்றனர். அவர்கள் பல மொழிகள் பேசுகின்றனர்; வெவ்வேறு பழக்க வழக்கங்களைப் பின்பற்றுகின்றனர்; எனினும், அவர்கள் அனைவரும் நமது சகோதர சகோதரிகள்தாம்!"

"நம் நாட்டில் மக்கள் உரையாடும் மொழிகள் எத்தனை?" என வினவினான் சேகர்.

"நாட்டின் வெவ்வேறு பகுதிகளிலும் பேசப்பட்டு வரும் முக்கியமான மொழிகள் பதினான்கு. இவற்றைத் தவிர, நாடெங்கிலும் ஆங்காங்கே சிறுபான்மையான மக்கள் பலர் பேசிவரும் கிளை மொழிகளும் உள்ளன."

"நாடு முழுவதும் டில்லியில் இருக்கும் அரசாங்கத்தால்தான் ஆளப்படுகின்றதா?" என்றான் சேகர்.

"இல்லை. முன்னே நான் சொன்னதுபோல், நம் நாடு பல ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் ஒரு சட்டசபையும் அரசாங்கமும் தனித் தனியே உண்டு. ஆங்கிலேயர்களின் நேரடியான ஆட்சிக்குட்பட்டிருந்த சென்னை, பம்பாய், மத்தியப் பிரதேசம், மேற்கு வங்காளம் போன்ற சில ராஜ்யங்களில் 'கவர்னர்' ராஜ்யத்தலைவராகவும், சுதேச மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்த திருவிதாங்கூர்-கொச்சி, மைசூர், ஹைதராபாத், மத்திய பாரதம், சௌராஷ்ட்ரம் போன்ற ராஜ்யங்களில் 'ராஜப்பிரமுகர்' ராஜ்யத்தலைவராகவும் சில ஆண்டுகளுக்கு முன்வரை இருந்துவந்தது. இப்போது ராஜ்யங்கள் யாவும் மாற்றியமைக்கப் பட்டுவிட்டன அல்லவா? 'ராஜப்பிரமுகர்' என்னும் பதவியே இப்போது கிடையாது. எல்லா ராஜ்யங்களிலும் ஒரே சீராகத் தற்போது 'கவர்னர்' தான் தலைவர்; 'ராஜ்யபாலர்' என்றும் அவர் அழைக்கப் பெறுகின்றார்."

"டில்லியில் உள்ள பார்லிமெண்ட்டில் இருப்பது போலவே, எல்லா ராஜ்யங்களின் சட்டமன்றங்களிலும் மேல் சபை, கீழ்ச்சபை என்று இரண்டு சபைகள் இருக்கின்றனவா?" என லீலா வினவினாள்.

"இல்லை. சென்னை, பஞ்சாப், மேற்கு வங்காளம், பீகார், உத்தரப்பிரதேசம், ஆந்திரப்பிரதேசம், பம்பாய், மைசூர் ஆகியவற்றில் இரண்டு சபைகள் உள்ளன. கீழ்ச்சபை 'சட்டசபை' எனப்படுகின்றது; ஆங்கிலத்தில் 'லெஜிஸ்லேடிவ் அஸெம்ப்ளி' என்றழைக்கப்படுகின்றது. மேல் சபையை ஆங்கிலத்தில் 'லெஜிஸ்லேட்டிவ் கவுன்சில்' என்றழைக்கின்றனர்."

"இந்தச் சட்டமன்றங்களும் மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகின்றனவா?"

"ஆம். ஒவ்வொரு ராஜ்யத்தின் சட்டசபையும் அந்த ராஜ்யத்தின் மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகிறது. மேல் சபையின் அங்கத்தினர்களில் ஒரு பகுதியினர் நகராண்மைக் கழகங்களாலும் சட்டசபை அங்கத்தினர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்; மற்றொரு பகுதியினர் ராஜ்யத்தின் கவர்னரால் நியமிக்கப்படுகின்றனர்."

"கவர்னர்கள் சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்களா?" என்று கேட்டான் சேகர்.

"இல்லை. அவர்கள் ராஷ்ட்ரபதியால் நியமிக்கப் பெறுவதால் அவருக்குத்தான் பொறுப்புள்ளவர்கள். எனினும், மக்களுக்குப் பதில் சொல்லும் பொறுப்பையுடைய மந்திரிகளின் ஆலோசனையின் பேரில்தான் கவர்னர்கள் எதையும் செய்யவேண்டும். ராஷ்ட்ரபதிகூட அங்ஙனமே செய்கின்றார்."

கேரளத்தின் கடற்கரையோரமாக, முடிவே யில்லாதது போன்ற அடர்ந்த தென்னஞ் சோலைகளின் நடுவே



கேரளத்துக் கடற்கழிகள்

ரயில்வண்டி மெல்ல மெல்ல நெளிந்து சென்றுகொண்டிருந்தது. திருவிதாங்கூரும் கொச்சியும் அழகான கடற்கழிகளுக்குப் பெயர்போனவை. அவற்றில் ஒன்றின் கரை வழியாகப் போகும்போது சுற்றிலும் தென்பட்ட இனிய காட்சிகள் குழந்தைகளை வியப்பில் ஆழ்த்தின. அவற்றின்

இயற்கையெழில் •குழந்தைகளைப் பெரிதும் கவர்ந்தது. அவ்வியற்கைக் காட்சிகளைக் கண்டு களித்த குழந்தைகள் "என்ன அழகான காட்சிகள், எவ்வளவு அழகான காட்சி கள்!" என்று சொல்லிச்சொல்லி மகிழ்ந்தனர். 1956-ஆம் ஆண்டில் சில பகுதிகளைச் சேர்த்தும் சில பகுதிகளை நீக்கியும் திருவிதாங்கூர், கொச்சி ராஜ்யங்கள் கேரள ராஜ்யமாக மாற்றியமைக்கப்பட்டன.

"இந்தியாவின் மேலக் கடற்கரை யோரமாக இப்போது நாம் போய்க்கொண்டிருக்கிறோம். அரபிக்கடல் இங்கிருந்து சிறிது தூரத்தில்தான் இருக்கிறது. மேற்கில் அரபிக் கடலும், கிழக்கில் வங்காள விரிகுடாவும், தெற்கில் இந்துமகா சமுத்திரமும் நமது நாட்டைச் சூழ்ந்திருப்பது தான் உங்களுக்குத் தெரியுமே. இம்மூன்று கடல்களின்



கன்யாகுமரி

அலைகளும் இந்தியத் தாயின் புனிதத் திருவடிகளை எப்போதும் அலம்பிய வண்ணமாக இருக்கின்றன,'' என்றார் கேசவன்.

"நமது நாட்டின் வடக்கில் என்ன இருக்கின்றது ?'' என்று கேட்டாள் லீலா.

"மாபெரும் இமயமலை; இந்தியத் தாயின் திருமுடியை அணிசெய்யும் வைரமுடிபோல் வடக்கில் ஒளி வீசிக் கொண்டு நிற்கின்றது. நாட்டின் குறுக்கே பாய்ந்தோடும் பல ஆறுகளோ அன்னையின் அழகுமேனியை அலங்கரிக்கும் அணிகலன்களின் ஆரங்கள் போலும் நகைகளின்மாலைகள் போலும் மின்னுகின்றன,'' என்று பதிலளித்தார் கேசவன்.

ரயில்வண்டி கிழக்கே திரும்பி, மேற்குத் தொடர்ச்சி மலைகளிடையே புகுந்தது. மலைச்சிகரங்களைச் சுற்றிலும் முகிற் கூட்டங்கள் சூழ்ந்து மிதந்து கொண்டிருந்தன. அவற்றை நோக்கியபடியே "இவை என்ன மலைகள் ?'' என்று சேகர் தன் தந்தையை வினவினான்.



மன்னும் இமயமலை

"மேற்குத் தொடர்ச்சி மலைகள் என்றழைக்கப்படும் மலைத்தொடர் இதுதான். தெற்கே நமது ராஜ்யத்திலிருந்து வடக்கே பம்பாய் ராஜ்யம் வரை இது நீண்டு கிடக்கிறது. நமது பகுதிகளில் 'ஸஹ்ய பர்வதம்' என்றும் மகா ராஷ்ட்ரத்தில் 'ஸஹ்யாத்ரி' என்றும் அழைக்கப்பெறு கின்றது. வேறு பகுதிகளில் வேறு பெயர்களும் இதற்கு உண்டு."

"நம் நாட்டில் வேறு என்னென்ன மலைகள் இருக் கின்றன?" என்று கேட்டாள் லீலா.

"கீழ்க் கடற்கரை நெடுகிலும் கிழக்குத் தொடர்ச்சி மலைகள் எனப்பெறும் மலைத்தொடர் இருக்கின்றது. இவ் விரு மலைத்தொடர்களும், வடக்கே இமயமலையும் ஏறக் குறைய நாட்டின் எல்லை முழுவதையும் அணைத்து நின்று, உள்ளே வசிக்கும் மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் ஒரு பிரம்மாண்டமான கோட்டைபோல் விளங்குகின்றன. இவை யன்றி, இந்தியாவின் நடுப்பகுதியில் விந்திய மலைகள், ஸாத்பூரா மலைகள் என்னும் வேறிரு மலைத் தொடர்களும் மேற்கிலிருந்து கிழக்காக அமைந்திருக்கின் றன. பெரியதும் சிறியதுமான ஆறுகள் பல இம்மலைகளி லிருந்து கிளம்பி, நிலத்தை வளப்படுத்திக்கொண்டும், இலட்சக் கணக்கான மக்களுக்கு உணவும் உயிரும் அளித்துக்கொண்டும், நாடெங்கிலும் பாய்ந்து ஓடிக் கொண்டிருக்கின்றன."

"இந்த ஆறுகள் யாவை?" என வினவினாள் லீலா.

"நம் நாட்டில் பல நதிகள் பாய்கின்றன. எனினும், கங்கையும் யமுனையும், ஸிந்துவும் அதன் துணை நதிகளும், பிரம்மபுத்திராவும் நர்மதையும், மகாநதியும் கோதாவரி யும், கிருஷ்ணவும் காவிரியும் மிகவும் சிறப்பானவை

யாகும். தொன்றுதொட்டு நெடுங்காலமாக மக்களின் நல் வாழ்விற்கும் செல்வத்திற்கும் அவையே முக்கிய ஆதார மாக இருந்து வருவதால், மக்கள் அவற்றைத் தெய்வங் களாகவே கருதி வணங்கி வழிபட்டுவருகின்றனர்.''

ரயில்வண்டி மலைக்குடைவுகள் சிலவற்றினூடே சென்றது. சேகருக்கும் லீலாவிற்கும் அது புதிய அனு பவம்; எனவே, அவர்களுக்கு ஒரே வேடிக்கையாக இருந் தது. மேற்குத்தொடர்ச்சி மலைகளிடையிருந்து வெளியே வந்த ரயில்வண்டி கிழக்கேயிருக்கும் சமவெளிகளை அடைந்தது. வழி நெடுகிலும் ரயில்வண்டி கடந்து சென்ற ஒவ்வோர் இடத்திலும் விண்ணைமுட்டும் கோபுரங்கள் பல தென்பட்டன. மிகுதியாகக் காணப்பட்ட அக்கோபுரங்கள் குழந்தைகளின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்தன.

''நாட்டின் இப்பகுதியின் பெயர் என்ன, அப்பா?'' என்று சேகர் தன் தந்தையைக் கேட்டான்.

''நாம் காண்பது தமிழ்நாடு. பெருங்கோவில்களுக் கும் பிரம்மாண்டமான கோபுரங்களுக்கும் பெயர்போன நாடு. முற்காலத்தில் வசித்த நமது முன்னோர்களின் கட்டிடக் கலைத்தேர்ச்சிக்குச் சிறப்பான எடுத்துக்காட்டுகளாகும் இவை. நாடெங்கிலும் இவற்றை நாம் காணலாம். ஆனால், தமிழ்நாடு அன்னியர்களின் தாக்குதல்களுக்கு மிகுந்த அளவு உட்படாததனால், வேறிடங்களைவிட இங்கே இக்கோவில்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.''

ரயில்வண்டி மதுரையை அடைந்தது. நகரின் நடு வில் பழமையான கோவிலின் அழகான கோபுரங்கள் கம்பீரமாக வானில் எழும்பி நிற்பதை ரயில்நிலையத்திலி ருந்தே குழந்தைகள் கண்டு மகிழ்ந்தனர்.

''ஒன்றைப்போல் ஒன்றாக நான்கு கோபுரங்கள் இவ் வூரில் தென்படுகின்றனவே?'' என்றாள் லீலா.



மதுரைக் கோவில்

"இதுதான் மதுரை மாநகரம். இது உலகின் மிகப் பழமையான பட்டணங்களில் ஒன்ருகும். பண்டைக் காலத்திலிருந்தே இப்பகுதியை ஆண்டுவந்த, தமிழ் மன்னர்களில் ஒரு மரபினராகிய, பாண்டிய மன்னர்களின் தலைநகரமாகத் திகழ்ந்த பட்டணம். நெடுங்காலத்திற்கு முன்னமேயே தமிழ்க் கல்விக்குப் பெயர்போன ஓர் இடமாகவும் இது விளங்கியது. பல புலவர்கள் தங்களுடைய இலக்கியத் திறமைக்கும் புலமைக்கும் பாராட்டுப் பெறும் பொருட்டு இங்கு வந்தனர்," என்று கேசவன் அவர்களுக்கு மதுரையின் பெருமையை எடுத்துரைத்தார்.

ரயில்வண்டி மதுரையை விட்டுக் கிளம்பியபோதே

இருட்டிவிட்டது. குழந்தைகளால் வெளியில் எதையும் காண முடியவில்லை. எனவே, பண்டைக் காலத்தில் தென்னிந்தியாவில் ஆட்சி புரிந்த பேரரசர்களைப் பற்றித் தங்களுக்குச் சொல்லும்படி அவர்கள் தந்தையிடம் வேண்டிக்கொண்டனர். சேர, சோழ, பாண்டிய மன்னர் களின் வீரச்செயல்களைப் பற்றிய கதைகளையும், அவ்வரசர் கள் தங்களுக்குள்ளேயே போட்டுக்கொண்ட சண்டை சச்சரவுகளைப்பற்றிய கதைகளையும் கேசவன் அவர் களுக்குச்சொன்னார். குழந்தைகள் தூங்கச் செல்லுமுன், அவ்வேந்தர்களின் அவைகளில் இருந்த புகழ்பெற்ற புலவர் பெருமக்களைப் பற்றியும் அவர்கள் இயற்றிய அருமையான நூல்களைக் குறித்தும் கேசவன் அவர்களுக்கு விவரமாகக் கூறினார்.

மறுநாள் காலை ரயில்வண்டி சென்னை சேர்ந்தது. கேசவனின் குடும்பத்தினர் இரண்டு நாள் அங்கே தங்கி னர். சென்னையில் காணத் தகுந்த முக்கியமான இடங்கள் எல்லாவற்றையும் சுற்றிப்பார்த்து மகிழ்ந்தனர். உலகி லேயே அழகிற் சிறந்த கடற்கரைகளுள் இரண்டாவ தெனப் புகழ் எய்திய சென்னை 'மரீனா'க் கடற்கரைக்கும் அவர்கள் சென்றனர். மூன்றாவது நாள் காலை 'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரெஸ்' ரயில்வண்டியில் டில்லிக்குப் புறப் பட்டனர். ரயில்வண்டி சில நிலையங்களைத் தாண்டியதும் அது நின்ற விடங்களில் மக்கள் தனக்குப் புரியாத ஒரு மொழியில் பேசுவதைச் சேகர் கவனித்தான். அது என்ன மொழி என்று தனது தந்தையைக் கேட்டான்.

"தெலுங்கு. இப்போது சென்னைக்கு வடக்கேயிருக் கும் ஆந்திரதேசத்திற்கு வந்துவிட்டோம். இனிமேல் தமிழோ, மலையாளமோ பேசுவோரைப் பார்க்கமாட்டோம்.

வேறு மொழியில் பேசுவோரைத்தான் காண்போம்," என்று மொழிந்தார் கேசவன்.

"ஆனுல், அவர்கள் பேச்சில் வரும் சில சொற்கள் எனக்குப் புரிகின்றனபோல் தோன்றுகிறதே?" என்ருன் சேகர்.

"ஆமாம். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம் என்னும் இந்நான்கு தென்னிந்திய மொழிகளும் ஒரே பொது-மொழியிலிருந்து தோன்றினவையே. மேலும், இம்மொழிகளில் வடஇந்திய மொழிகளுக்கெல்லாம் மூலமான சம்ஸ்கிருதத்திலிருந்தும் ஏராளமான சொற்கள் கலந்திருக்கின்றன. தென்னிந்திய மொழிகள் 'திராவிட மொழிகள்' என்றும் வடஇந்திய மொழிகள் 'ஆரிய மொழி கள்' என்றும் அழைக்கப்பெறுகின்றன."

ரயில் தெனுலிக்கு வந்தது. தெனுலிராமனின் வேடிக்கைக் கதைகள் குழந்தைகளின் நினைவிற்கு வந்தன. "தெனுலிராமன் கதைகள் எனப்படும் வேடிக்கைக் கதை கள் பல கேட்டிருக்கின்ருேமே, அந்தத் தெனுலிராமன் இருந்த ஊர்தானே இது?" என்று சேகரும் லீலாவும் வினவினர்.

"ஆம். அதே ஊர்தான் இது. தெனுலிராமன், விஜய நகர சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த கீர்த்தி வாய்ந்த ஆந்திர அரசரான கிருஷ்ணதேவராயரின் சபையில் இருந்தான் என்னும் விவரந்தான் உங்களுக்குத் தெரியுமே! ஒரு காலத்தில் சீருஞ்சிறப்புமாய் திகழ்ந்தது அத்தலேநகரம்; அதன் பாழடைந்த கட்டிடங்களே நாட்டின் உட்பகுதியி லுள்ள ஹம்பி என்னுமிடத்தில் இன்றும் நாம் காணலாம்."

ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த தெலிங்கானுப் பகுதியை ரயில்வண்டி அடைந்தபோது நன்ருக இருட்டி விட்டது. குழந்தைகள் தூங்குவதற்குமுன், மைசூர்,



*ஹம்பியின் பாழ்களிடை ஒரு கற்தேர்*

பம்பாய் ஆகிய ராஜ்யங்களிலுள்ள முக்கியமான இடங்களைப் பற்றியும் அந்த ராஜ்யங்களில் வசிக்கும் மக்களைப் பற்றியும் கேசவன் அவர்களுக்கு எடுத்துச் சொன்னார். உலகின் அற்புதங்களாகக் கருதப்பட்டுவரும் கண்கவர் ஓவியங்கள் நிறைந்த அஜந்தாக் குகைகள், பாறைகளைக் குடைந்து கட்டப்பெற்ற குடைவரைக் கோவில்கள் மிகுந்த எல்லோராக் குகைகள், இந்தியாவிலேயே மிகவும் உயரமான ஜெர்ஸோப்பா நீர்வீழ்ச்சி, மைசூரைச் சேர்ந்த சிரவணபேளகோளாவில் உள்ள பிரம்மாண்டமான கோமதேச்வரர் கற்சிலை, பேலூர்க் கோவிலில் இருக்கும் அழகு ததும்பும் சிற்பங்கள், பம்பாய்க் கருகிலிருக்கும் எலிபெண்டாக் குகைகள் — இவைகளைப்பற்றியும் குழந்தைகளுக்கு விரிவாகச் சொன்னார் கேசவன். மகாராஷ்டிர சாம்

ராஜ்யத்தை நிறுவிய வீரசிவாஜியைக் குறித்தும் அவர் சம்பந்தப்பட்ட மகாராஷ்ட்ர சரித்திரத்தின் ஒரு பகுதியைப் பற்றியும் கேசவன் விளக்கிக் கூறினுர்.

"இந்த ராஜ்யங்களில் என்னென்ன மொழிகள் பேசப் பட்டுவருகின்றன?"

"ஆந்திரப் பிரதேசத்தில் பெரும்பாலும் தெலுங்கு தான் பேசப்படுகின்றது. ஹைதராபாத் பகுதிகளில் உருது மொழியும் புழக்கத்தில் இருக்கின்றது. மைசூரில் மக்கள் கன்னடத்தில் பேசுகின்றனர். ஆனுல், பம்பாயில் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மக்கள் வந்து வசிக்கின் றனர். அங்கிருப்பவர்களிற் பெரும்பான்மையோர் மராத் தியும் குஜராத்தியும் பேசுகின்றனர். தமிழ், தெலுங்கு, கன்னடம், ஹிந்தி ஆகியவையும் அங்கே பேசப்படு கின்றன."



*எல்லோராக் குகைகள்*



கோமதேச்வரர் சிலை

"ரயில்வண்டி இந்த ராஜ்யங்கள் எல்லாவற்றின் வழியாகவும் போகாதா?" என்றாள் லீலா.

"பம்பாய் ராஜ்யத்தின் கிழக்குப் பகுதி வழியாக மட்டும் செல்லும். ஆனால், நாம் செல்லும் ரயில்பாதைக்கு மேற்கிலிருக்கும் மைசூர் ராஜ்யத்தின் வழியாகப் போகாது. கிழக்கிலுள்ள ஒரிஸா, பீகார், மேற்கு வங்காளம், அஸ்ஸாம் ஆகிய ராஜ்யங்கள் வழியாகவும் நம் வண்டி போகாது. இந்த ராஜ்யங்களில் பேசப்படும் மொழிகள் முறையே

ஒரியா, ஹிந்தி, வங்காளி, அஸ்ஸாமி ஆகியன. இப் பிரதேச மொழி ஒவ்வொன்றும் அந்தந்த ராஜ்யத்திலும் சட்டசபையிலும் அரசாங்க மொழியாக இருந்துவருகிறது. இந்த ராஜ்யங்கள் எல்லாவற்றிற்கும் போகவேண்டும் என்ருல் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் நாம் தனித்தனியாகப் பிரயாணம் செய்யவேண்டும்,'' என்ருர் கேசவன்.

''இந்தப் பிரதேசங்களில் பார்க்கவேண்டிய முக்கிய மான இடங்கள் எவை?'' என்று வினவினுன் சேகர்.

''ஒரிஸாவில் பூரி, புவனேச்வரம், கோணுர்க்கம் ஆகிய இடங்கள் இருக்கின்றன. கட்டிட அமைப்பெழில் மிகுந்து சிறப்புடன் விளங்கும் புகழ்பெற்ற கோவில்கள்



ஜெகன்னுதர் கோவில், பூரி



நாளந்தாப் பல்கலைக் கழகத்தின் இடிந்த பகுதிகள்

பல இவ்விடங்களில் உள. சந்திரகுப்த மௌரியன், அசோகன், இன்னும் பல பேரரசர்கள் ஆகியோரின் தலை நகராகத் திகழ்ந்த பாடலிபுத்திரம்—இன்றைய பாட்னு—பீகாரில் இருக்கின்றது; பீகாரிலேயேதான் நாளந்தாப் பல்கலைக் கழகம் இருந்த இடமும் இருக்கின்றது. பௌத்தப் பேரறிஞர் பலர் அங்கிருந்தனர். சீனு போன்ற மிகத் தொலைவான நாடுகளிலிருந்துகூட அறிஞர்கள் கல்வி பெறும்பொருட்டு நாளந்தாவிற்கு வந்தார்களாம். வங்காளத்தில் அண்மையிற் தோன்றிய பெரியோர்கள் இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், கவி ரவீந்திரநாத தாகூர், நேதாஜி சுபாஷ் போஸ் ஆகியோராவர்."

இரவில் நேரம் மிகுந்துவிட்டதால் குழந்தைகளைத் தூக்கம் அழுத்தியது; சிறிது நேரத்தில் அவர்கள் அயர்ந்து தூங்கிவிட்டனர்.

மறுநாள் காலை அவர்கள் விழித்துக் கொண்டபோது, ரயில் பம்பாய் ராஜ்யத்திலுள்ள வார்தாவில் நின்றுகொண்டிருந்தது.

"காந்திஜி இருந்த இடம் இதுதானே?" என்று கேட்டான் சேகர்.

"ஆம். இங்கிருந்து கிட்டத்தட்ட மூன்று மைல் தொலைவில் சேவாகிராமம் என்றொரு சிறு கிராமம் இருக்கின்றது. அங்குதான் காந்திஜி சிறு குடிசை ஒன்றைக் கட்டிக் கொண்டு தம் வாழ்நாளின் பிற்பகுதியைக் கழித்தார்."



*காந்திஜியின் குடில், சேவாகிராமம்*

" சேவாகிராமம் சென்று காந்திஜி இருந்த இடத்தைக் காணவேண்டும் என்று எனக்கு ஆசையாயிருக்கின்றது." என்ருள் லீலா.

" டில்லியிலிருந்து திரும்பிவரும்போது அங்கே செல்லலாம். காந்திஜி வசித்த குடிசை இன்னமும் அப்படியேதான் இருக்கிறது. அது ஒரு தேசீயச் சின்னமாகப் போற்றப்பட்டு வருகின்றது," எனப்புகன்ருர் கேசவன்.

" காந்திஜி பிறந்த இடம் எங்கேயுள்ளது ?" என லீலா வினவினுள்.

" அவர் பிறந்தது கத்தியவாட் பிரதேசம். அது பம்பாய் ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இப்போது இருக்கின்றது."

" கத்தியவாட் எங்கேயிருக்கின்றது ?"

" பம்பாய்க்கு வடக்கே, மேற்குக் கடற்கரையோரத்தில் உள்ளது. அந்த ராஜ்யத்தையோ, குஜராத்திற்கு வடகிழக்கிலிருக்கும் ராஜஸ்தானையோ இப்பிரயாணத்தின் போது நாம் காணமுடியாது. இன்னும் வடக்கே தள்ளியிருக்கும் பஞ்சாப், காஷ்மீர் ராஜ்யங்களையும் இப்போது நாம் பார்க்கமுடியாது. குஜராத்தில் குஜராத்தி மொழியும் பஞ்சாபில் பஞ்சாபியும் காஷ்மீரத்தில் காஷ்மீரியும் பேசப் படுகின்றன."

" வீரம் படைத்த ராஜபுத்திரர்கள் இருப்பது ராஜஸ்தான்தானே ?" என்று கேட்டான் சேகர்.

" ஆம். ராணு பிரதாப்பும் பத்மினி அரசியும் பிறந்த இடம் அது. அவர்கள் காலத்தில் சிறப்புடன் விளங்கிய அழகிய கட்டிடங்களைச் சித்தூரிலும் வேறு பல விடங்களிலும் இன்றைக்கும் நாம் காணலாம்."

" பஞ்சாப் எதற்குப் பெயர் பெற்றது ?"

" ஐந்து நதிகள் பாயும் பிரதேசம் அது. வரலாற்றுப்

புகழ்பெற்ற மாபெரும் போர்கள் பல நிகழ்ந்த இடம் பஞ்சாப். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்குமிடையே நிகழ்ந்த மகாபாரதப் போர் நடைபெற்ற குருக்ஷேத்திரம் அங்குதான் இருக்கின்றது.''

''நம் நாட்டில் மிக அழகான பகுதி காஷ்மீர்தான் என்று சொல்கிறார்களே ?'' என்றான் சேகர்.

''ஆம். 'இந்தியாவின் சொர்க்கம்' என அழைக்கப் பெறுவது காஷ்மீர்தான். வெண்பனியும் வண்ண மலர் களும் நிறைந்த எழிற் பிரதேசம் அது. கண்ணிற்கினிய



காஷ்மீர், இந்தியாவின் சொர்க்கம்

காட்சிகளும் மனத்தைக் கவ்வும் இயற்கை வனப்பும் மிகுந் திருக்கும் பகுதி காஷ்மீர்."

விந்தியம், ஸாத்பூரா மலைத்தொடர்களிடையே ரயில் வண்டி அப்போது சென்று கொண்டிருந்தது. தங்களைச் சுற்றிலும் எங்கு திரும்பினாலும் காணப்பெற்ற மலைக் காட்சிகளில் ஒன்றி மயங்கினர் குழந்தைகள். மாலையில் ரயில்வண்டி நர்மதை நதியைத் தாண்டியதும், குழந்தை கள் பிரயாணத்தினால் சற்று அலுப்புற்றவர்போலக் காணப் பட்டனர்.

"இங்கிருந்து டில்லி இன்னும் எத்தனை தொலைவு இருக்கின்றது?" எனக் கேட்டனர் சேகரும் லீலாவும்.

"மத்திய பாரத் என்னும் இடத்திற்கு இப்போது வந்திருக்கின்றோம். தற்போது இது மத்தியப் பிரதேசத்தின் ஒரு பகுதியாக இருக்கின்றது. இதைத் தாண்டுவதற்கு இரவு முழுவதும் செல்லும். காலையில் உத்தரப் பிரதே சத்தை அடைவோம். பிறகு ஏறக்குறைய மூன்று மணி நேரத்திற்குள்ளாக டில்லி போய்விடுவோம்."

"இப்பகுதியில் என்னென்ன முக்கியமான இடங்கள் உள்ளன?" என வினவினான் சேகர்.

"ராணி லக்ஷ்மிபாய் இருந்த ஜான்ஸி என்னும் ஊரைப்பற்றி நீ கேள்விப்பட்டதில்லையா?"

"ஓ, தெரியுமே. ஆங்கிலேயர்களுக்கெதிராகப் போர் புரிந்த வீர அரசி ஜான்ஸி ராணியின் ஊர்தானே?"

"ஆம். அந்த ஜான்ஸி இப்பகுதியில்தான் உள்ளது. ஜான்ஸியில் ரயில்வண்டி நின்றாலும் இருட்டாயிருக்கு மாதலால் அவ்வூரைப் பார்க்கமுடியாது. அங்ஙனமே குவாலியர் நகரையும் காணமுடியாது. மத்தியப் பிரதே சத்தின் தலைநகராகத் தற்போது விளங்கும் போபால் வழி யாகவும் ரயில்வண்டி செல்லும். பிரசித்திபெற்ற

பௌத்த ஸ்தூபம் இருக்கும் ஸாஞ்சியும் மத்தியப் பிரதேசத்தில்தான் இருக்கின்றது.''

காலையில் ரயில்வண்டி ஆக்ராவை அடைந்ததும், கேசவன் "முகலாயச் சக்கரவர்த்தியின் தலைநகரம் இருந்த இடம் இதுதான். படேப்பூர் ஸிக்ரியில் இன்றைக்கும் அத்தலைநகரத்தைக் காணலாம்," என்று குழந்தைகளிடம் கூறினார்.

"தாஜ் மகால் இருப்பது இங்கேதானே?" எனக் கேட்டாள் லீலா.

"ஆம். திரும்பி வரும்போது அவை எல்லாவற்றையும் பார்க்கலாம்."

மதுரா வந்தது; கிருஷ்ண பகவான் பிறந்த இடம் அது என்று சொன்னார் கேசவன்.

"இராமர் பிறந்தது எங்கே?" என வினவினான் சேகர்.

"அயோத்தியில். அதுவும் இந்த ராஜ்யத்தில்தான், அதாவது, உத்திரப் பிரதேசத்தில்தான் இருக்கின்றது. காசி, அலாகாபாத், ஹரித்துவாரம், பதரிநாத் போன்ற புண்ணிய தலங்கள் பலவும் இங்குதான் உள்ளன. கங்கையும் யமுனையும் வேறுபல புனித நதிகளும் இங்கே கூடுகின்றன. வெவ்வேறு இனத்தைச் சேர்ந்த பல்வேறு மக்கட் கூட்டத்தினரும் இந்நாட்டில் ஒன்று கலந்து, இந்திய நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் செழுமைக்கும் வளத்திற்கும் பல்வேறு வாழ்க்கை வகைகளுக்கும் காரணமாய் இருந்துவந்திருப்பதை இந்நதிகள் நமக்கு நினைப்பூட்டுகின்றன. இந்நாட்டு மக்கள் பல மொழிகளிற் பேசினும், பல வகைப்பட்ட பழக்க வழக்கங்களைப் பின்பற்றினும் ஒரு தாய் வயிற்றுச் சேய்கள்போல் அனைவரும் இந்தியத் தாய்க்கு அஞ்சலி செலுத்துகின்றனர்," என்று உணர்ச்சிப் பெருக்குடன் விடையளித்தார் கேசவன்.

## வினாக்கள்

1. இந்தியாவின் படம் ஒன்று வரைந்து, கேசவனும் அவரது குடும்பத்ினரும் திருவனந்தபுரத்திலிருந்து டில்லிக்குச்சென்ற ரயில் மார்க்கத்தை அதில் குறிப்பிடுக.

2. இந்தியாவின் முக்கியமான மொழிகளைக் கூறுக.

3. சட்டசபைக்கும் மேல்சபைக்கும் உள்ள வேறுபாடு என்ன ?

4. இந்தியாவின் ஆறுகள் ஏன் புனிதமானவைகளாகக் கருதப்படுகின்றன ?

5. இவ்வத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள புகழ்பெற்ற இடங்களில் நீ பார்த்திருப்பவை எத்தனை ?

6. நம் பண்டைப் பண்பாட்டையும் நாகரிகத்தையும் நமக்கு நினைவுபடுத்தும் பழங்காலத்துச் சின்னங்கள் சிலவற்றைக் கூறுக.

## 3. டில்லி—நமது தலைநகரம்

ரயில்வண்டி அதிகாலையில் புதுடில்லி போய்ச் சேர்ந்தது. கேசவனும் அவரது குடும்பத்தினரும் வண்டியிலிருந்து இறங்கி, தலைநகரின் அமைதியான பகுதி ஒன்றிலிருந்த ஒரு பங்களாவிற்குக் காரில் சென்றனர். பார்லிமெண்ட் கூட்டம் நடக்கும்போது அப்பகுதியில்தான் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் பெரும்பாலும் தங்குவார்கள். கேசவன் குடும்பத்தினர் அடுத்து சில நாட்களுக்கு, டில்லியிலுள்ள சரித்திரச் சின்னங்களாக விளங்கும் கட்டிடங்களுக்குப் போவதிலும் வேறு பல முக்கியமான இடங்களைப் பார்ப்பதிலும் ஈடுபட்டிருந்தனர். முதன் முதலில் அவர்கள் காணச் சென்றது பிரசித்தி வாய்ந்த குதுப் மினார்; அதற்குப் போகும்போது 'புரானா கிலா' எனப்படும் பழைய கோட்டைப் பகுதி வழியாகச் சென்றனர். பாண்டவர்களின் தலைநகராக விளங்கிய இந்திரப்பிரஸ்தம் இருந்த இடம் அதுதான் என்று கேசவன் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னார்.

கோட்டையின் இடிந்து போயிருந்த, பழஞ் சுவர்களைப் பார்த்து வியப்புற்ற சேகர் "இக்கோட்டையைப் பாண்டவர்கள்தாம் கட்டினரா?" என்று கேட்டான்.

"இல்லை. அழகான அப்பட்டணத்தின் ஒரு பகுதி கூட இப்போது இல்லை. உயரமான மதில்கள், அகன்ற தெருக்கள், மாபெரும் அரண்மனைகள், தூண்களுடன் கூடிய பெரிய மண்டபங்கள், பசுமையான சோலைகள், செல்வம் பெருத்த ஆலயங்கள்—இவைகளுடன் கூடிய அந்நகரம் மிகச் சிறப்பான முறையில் அமைக்கப்

பெற்ற அழகான பட்டணம் என வருணிக்கப்பட்டுள்ளது. இப்போது எஞ்சியிருப்பவையாவும் சில இடிந்த சுவர்களே. நம் வரலாற்றின் பழம் பெருமையை நமக்கு நினைப்பூட்டுபவை அவ்விடிந்த சுவர்களே. மொஹெஞ்சொ-தாரோ*வில் செய்ததுபோல், ஒருகால் நிலத்தைத் தோண்டிப் பார்த்தால் அப்பெரு நகரின் சிதைந்த பகுதிகளைப் பார்க்கலாமோ, என்னவோ?"

"மகாபாரதக் காலத்தில்கூட டில்லிதான் தலைநகராக இருந்ததா?" என வினவினாள் லீலா.

"ஆம். உண்மையில், அதை நம் நாட்டின் ஓர் அழியா நகரம்' என்றே அழைக்கலாம்!"

"பாண்டவர்கள் எப்போது வசித்தனர், அப்பா?" என்று சேகர் கேட்டான்.

"அதைப்பற்றி உறுதியாக எதுவும் நமக்குத் தெரியாது. ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் அவர்கள் இருந்ததாகத் தெரிகிறது."

"அப்படியென்றால் இக்கோட்டையை யார் கட்டினர்?" என நிர்மலா வினவினாள்.

"வெகு காலத்திற்குப் பிறகு, கிட்டத்தட்ட நானூறு ஆண்டுகளுக்கு முன்புதான் இது கட்டப்பெற்றது. பாண்டவர்களின் தலைநகரம் இருந்தவிடத்தில், பழைய கோட்டைப் பகுதியில் ஹுமாயூன், ஷேர்-ஷா என்னும் பேரரசர்கள் இப்பட்டணத்தை நிறுவினர்."

அரை மணி நேரத்தில் அவர்கள் குதுப் மினாரை அடைந்தனர். குழந்தைகள் மினாரின்மீது ஏறி, டில்லி நகரம் முழுவதையும் கண்டு களித்தனர்.

"இங்கிருந்து பார்க்கும்போது தலை நகரின் தோற்றம்

*பாகிஸ்தானின் சிந்து மாகாணத்தில் 1912-இல் அகழ்ந்தெடுக்கப்பெற்ற பண்டைய நகரம்.



குதுப்மினர்

எவ்வளவு அழகாக இருக்கின்றது!" என்று வியந்து போற்றினன் சேகர்.

"இம்மினரின் உயரம் எவ்வளவு?" என்று லீலா கேட்டாள்.

"இருநூற்று முப்பத்தேழு அடி. இந்தியாவிலுள்ள கோபுரங்கள் எல்லாவற்றிலும் இதுதான் மிக்க உயரமுள்ளது," என்று கேசவன் பதிலளித்தார்.

"இக்கோபுரம் எவ்வளவு அழகு பொருந்தியது!" என்ருன் சேகர்.

"ஆமாம். இதைக் கட்டியது யார்?" என்ருள் லீலா.

"டில்லியில் அரசுபுரிந்த முதல் முஸ்லிம் மன்னர்கள். எழுநூறு ஆண்டுகளுக்கு முன்பு அரசாண்ட பிருதிவி ராஜன் என்னும் ஹிந்து அரசனைத் தோற்கடித்து அவர்கள் டில்லியைக் கைப்பற்றினர். பிருதிவிராஜனே இக்கோபுரத்தைக் கட்டியதாகக்கூடச் சிலர் சொல்கின்றனர்."

"ராணி சம்யுக்தையின் சுயம்வரம் நடந்துகொண்டிருந்தபோது, தன் குதிரைமீது அவளைத் தூக்கிச் சென்ற ராஜபுத்திரன் அவன்தானே?" என வினவிஞள் லீலா.

"ஆம். அதே ராஜகுமாரன்தான். டில்லியில் ஆட்சி புரிந்த கடைசி ஹிந்து அரசன் அவன்தான். இப்போது நாம் நின்றுகொண்டிருக்கும் இதே இடத்தில்தான் அவனுடைய தலைநகரம் இருந்தது."

"ஒருகால் அதனுல்தானே என்னவோ, இங்குள்ள பாழடைந்த பகுதிகள் சில ஹிந்துக் கோவில்களில் இருக்கும் மண்டபங்கள்போலத் தோன்றுகின்றன," என்று கூறினுள் நிர்மலா.

"ஆனுல், இங்கே ஏன் ஒரு மசூதியும் இருக்கிறது?" எனக் கேட்டாள் லீலா.

"குதுப்-உத்-தீன் என்னும் முதலாவது முஸ்லிம் மன்னன் பிருதிவி ராஜனிடமிருந்து டில்லியைக் கைப்பற்றியபோது, இங்கிருந்த தலைநகரின் ஒரு பகுதியையும் ஹிந்துக் கோவிலையும் இடித்துத் தன் விருப்பப்படி அதை மாற்றியமைத்துக் கட்டினுன். அவனுடைய தலைநகரமும் இதே இடத்தில்தான் இருந்தது."

அருகிலிருந்த இரும்புத்தூண் சேகரின் கவனத்தைக்

கவர்ந்தது. அதை நெருங்கியவாறே "இது என்ன தூண்?" எனத் தன் தந்தையிடம் கேட்டான்,

"இதுதான் புகழ்பெற்ற 'இரும்புத் தூண்'. உலோகங்களைக் குறித்துப் பண்டைய இந்தியர்களுக்கிருந்த தேர்ச்சியின் சின்னமாக இது விளங்கிவருகின்றது. வெய்யில், மழை, காற்று, பனி—இவற்றினுல் சிறிதும் பாதிக்கப்படாமல் பல நூற்றுண்டுகளாகத் திறந்த



இரும்புத் தூண், டில்லி

வெளியிலேயே இருந்துவருகிறது, ஆயினும் சிறிதுகூடத் துருப் பிடித்ததில்லை.''

'' அப்படியா ? உண்மையில் ஆச்சரியமான தகவல் தான் இது ! '' என்ருள் நிர்மலா.

'' இத்தூணை யார் கட்டிஞர் ? '' என வினவிஞள் லீலா.

'' சந்திரன் என்னும் ஹிந்து அரசன் மகாவிஷ்ணு வின் பெருமையை விளக்கும் சின்னமாக இதைக் கட்டிஞன். 'விஷ்ணு கம்பம்' என்றும் இது அழைக்கப் பெறுகின்றது.''

அலை-மிஞர் என்னும் கட்டிடத்தைப் பார்த்த நிர்மலா '' முழுதும் கட்டப்பெருது இங்கே வட்ட வடிவமான கட்டிடம் ஒன்று இருக்கின்றதே, என்ன இது ? '' எனக் கேட்டாள்,

'' குதுப்மிஞர் கட்டப்பட்ட சில ஆண்டுகளுக்குப் பின்னர் அலா-உத்-தீன் கில்ஜி என்னும் இன்ெெருரு முஸ் லிம் அரசன் அரசு புரிந்து வந்தான். குதுப்மிஞரைவிட மிகுந்த உயரமுள்ள ஒரு மிஞரைக் கட்ட அவன் விரும்பிஞன். ஆஞல், அது முற்றுப் பெறவில்லை. இவ்வரசனுடைய தலைநகரமும் இங்கேதான் இருந்தது. இவ்விடத்திற்கு அருகாமையில்தான் பழைய நகரத்தை ஒட்டிஞற்போல் புதிய பட்டணம் ஒன்றை அவன் அமைத்தான்.''

''சுற்றிலும் இங்கே காணப்பெறும் இடிந்த கட்டிடங்கள் அந்நகரத்தைச் சேர்ந்தனவா ? ''

'' ஆமாம். உண்மையில், இதே பகுதியில் பிற்பட்டு வந்த அரசர்கள் அமைத்த இன்னும் இரண்டு நகரங்கள் உள்ளன. இவ்வாருக, நான்கு டில்லிகள் இங்கே தோன்றி மறைந்துள்ளன. இப்போது ஐந்தாவது டில்லிக்குப் போகலாம், வாருங்கள்.''



அசோக ஸ்தம்பம்

குதுப்மினரிலிருந்து கிளம்பி ஏறக்குறைய ஒரு மணி நேரத்திற்குள் அவர்கள் பிரோஸ் ஷா-கோட்லாவிற்கு வந்தனர். அங்கிருந்த இடிந்துபோன கட்டிடங்களை எல்லாம் பார்த்துவிட்டு அசோக ஸ்தம்பத்தினருகில் வந்தனர்.

" இது என்ன ஸ்தம்பம் ? " என்று கேட்டான் சேகர்.

" அசோக ஸ்தம்பம் என்றழைக்கப் பெறுவது இது தான். கிட்டத்தட்ட இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அசோகர் என்னும் பேரரசர் ஒருவர் நம் நாட்டை ஆண்டு வந்தார். அவரைப் பற்றித்தான் சரித்திரத்தில் படித்திருக்கின்றாயே ! "

" ஆம். வேறெந்த மன்னனுடனும் போர் செய்ய மாட்டேன் எனப் பிரதிக்ஞை செய்து, அதன்படியே போரிலேயே இறங்காதிருந்த மாமன்னர் அல்லவோ அவர்!"

" ஆம். குடிமக்களைத் தன் குழந்தைகளைப் போலவே அவர் நேசித்தார். நல்ல நெறியுடன் நேர்மையான வழியில் அவர்கள் வாழ்க்கை நடத்த வேண்டுமென்றும், ஒருவரை யொருவர்—ஏன், பிராணிகளையும் பறவைகளையுங்கூட—நேசித்து அன்பு வாழ்வு வாழவேண்டுமென்றும் அவர் விரும்பினர். நாடு முழுவதும் பல ஸ்தம்பங்களை நாட்டி, தம்முடைய உயர்ந்த கருத்துக்களடங்கிய உபதேசங்களை யும் மேலான சட்டங்களையும் மக்கள் படித்துப் பின்பற்ற வேண்டுமென்பதற்காக அவற்றின்மீது பொறித்து வைத் தார். உலகம் முழுவதும் போற்றும் இப்பேரரசரால் நாட்டப்பெற்ற ஸ்தம்பங்களில் ஒன்று டில்லியில் இருப்பது பற்றி நாமெல்லோரும் மகிழ்ந்து பெருமைப்படவேண்டும்."

" அசோகர் டில்லியில்தான் இந்த ஸ்தம்பத்தை நாட் டினரா?"

" இல்லை. அசோகரின் தலைநகரம் இங்கேயிருக்க வில்லை. அவருடைய தலைநகரம் பாடலிபுத்திரம். ஏற்கனவேயே நான் சொல்லியதுபோல், பழங்காலத்தி லிருந்த மாபெரும் தலைநகரங்களில் அதுவும் ஒன்று. இங்கிருந்து ஏறக்குறைய எழுநூறு மைல் தொலைவில், இன்றைய பாட்னு நகருக்கருகில் இருக்கின்றது. இந்த ஸ்தம்பம் முதலில் வேறெங்கேயோதான் இருந்தது. சிதைந்த கட்டிடங்கள் சிலவற்றை இங்கே இப்போது பார்க்கிறேமே, அவைகள் இருந்த நகரைக்கட்டிய முஸ்லிம் அரசன்தான் இந்த ஸ்தம்பத்தை இங்கே கொண்டுவந்தான்."

" இப்போதுள்ள சர்க்கார்க் கட்டிடங்களுக்கருகில்



ஒரு ஸ்தம்பத்தின் மீதுள்ள கல்வெட்டு

இந்த ஸ்தம்பம் இருந்தால் மிக்கப் பொருத்தமாயிருக்கும்," என்றுள் நிர்மலா.

"ஆம். அதுவும் ஒரு நல்ல யோசனைதான். சரி; இப்போது ஆருவது டில்லி இருந்த பழைய கோட்டைப் பகுதிக்குச் செல்லலாம்,"

சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் 'புராண கிலா' எனப்படும் பழைய கோட்டைப் பகுதிக்கு வந்தனர். கோட்டையின் கனத்த பெருங்கதவுகளையும் இடிந்திருந்த மதிற்சுவர்களையும் பார்த்தனர். பின்னர், அவர்கள் ஷேர்-ஷா மசூதிக்குச் சென்றனர்.

"இந்த மசூதியைக் கட்டியது யார்?" என்று வினவினுள் லீலா.

"இக்கோட்டையின் ஒரு பகுதியைக் கட்டிய ஷேர்-ஷாதான் இதையும் கட்டினன்."

இரண்டடுக்குள்ள மாளிகை ஒன்று தென்பட்டது. அவர்கள் அதனருகிற் சென்றனர். "இது என்ன கட்டிடம்?" எனக்கேட்டான் சேகர்.

"ஷேர்-மண்டல் எனப்படும் மாளிகை இதுதான். ஹுமாயூன் சக்கரவர்த்தி இதைத்தான் தமது நூல் நிலையமாக உபயோகித்து வந்தாராம். இக்கட்டிடத்திலேயேதான் செங்குத்தான மாடிப்படிகளிலிருந்து இறங்கிவரும்போது ஹுமாயூன் தவறிக் கீழே விழுந்து, சில நாட்களுக்கெல்லாம் இறந்துவிட்டார். இங்கிருந்தே அவருடைய சமாதியைப் பார்க்கலாம்," என்று கூறிச் சுமார் ஒரு மைல் தொலைவிலிருந்த அழகான சமாதி ஒன்றைக் கேசவன் அவர்களுக்குச் சுட்டிக் காட்டினர்.



*செங்கோட்டை, டில்லி*

பின்னர், அவர்கள் பழைய கோட்டைப் பகுதிக்கு அருகாமையிலுள்ள செங்கோட்டைக்குச் சென்றனர். அதன் கம்பீரமான மதில்களையும் பெரிய, கனமான கதவுகளையும் பார்த்து வியப்பெய்திய சேகர் "இக்கோட்டை நல்ல நிலையிலே இருக்கின்றதே!" என்று மொழிந்தான்.

"இதைக் கட்டியது யார்?" எனக்கேட்டாள் லீலா.

"ஷா-ஜஹான். ஆக்ராவிலுள்ள உலகப் பிரசித்தி வாய்ந்த தாஜ் மகாலைக் கட்டியவன்."

"பேரழகி மும்தாஜ் ராணியின் கணவன் தானே?" என்றாள் லீலா.

"ஆம். வேறு பல அழகான கட்டிடங்களையும் அவன் கட்டியிருக்கிறான். அவற்றைக் கோட்டையினுள் பார்க்கலாம்," என்று கூறி, கேசவன் அவர்களை உள்ளே அழைத்துச் சென்றார்.

முதலில் திவான் – இ – ஆம் என்னுமிடத்திற்கு அவர்கள் சென்றனர்.

"இதுதான் சக்கரவர்த்தியின் பொதுப் பேட்டி மண்டபம் அல்லது கொலு மண்டபம். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்னும் வேறுபாடின்றிக் குடிமக்கள் அனைவருக்கும் அரசர் பேட்டியளிப்பது இங்கேதான்," என்று கேசவன் அவர்களுக்குச் சொன்னார்.

மண்டபத்தின் ஒரு கோடியில் மலர்கள், பறவைகள்— இவற்றின் சித்திரங்களால் நேர்த்தியாக அலங்கரிக்கப் பெற்றிருந்த சலவைக்கல் மேடை ஒன்று இருந்தது. அதை நோக்கிச் சென்றவாறு "இது என்ன, சலவைக்கல்லாலாகிய மேடை?" என லீலா வினவினாள்

"இம்மேடையின்மீது அமர்ந்துகொண்டுதான் சக்கரவர்த்தி குடிமக்களின் குறைகளைக் கேட்பது வழக்கம். உட்புறம் இன்னொரு மண்டபம் இருக்கின்றது. முழுவதும்



திவான் - இ - ஆம், செங்கோட்டை

சலவைக் கற்களாலேயே ஆகியது. இதைவிட மிகமிக அழகுவாய்ந்தது. வாருங்கள், அங்கே போகலாம்."

சேகரும் லீலாவும் அம்மண்டபத்தின் வனப்பைக் கண்டு ஒரு கணம் மெய்மறந்து மௌனமாக நின்றனர். பிறகு, இருவரும் "நாங்கள் கண்டவை எல்லாவற்றிலும் இதுவே மிகமிக அற்புதமானது," எனக் கூறினர்.

"இதன் பெயர் திவான்–இ–காஸ் அல்லது பிரத்தியேகப் பேட்டி மண்டபம். பிரபுக்களையும் வேறு பல முக்கியமான நபர்களையும் சக்கரவர்த்தி இம்மண்டபத்திலேதான் சந்தித்துப் பேசுவார்," என்றார் கேசவன்.

"அதோ அங்கே என்ன எழுதப்பட்டிருக்கிறது?" எனக் கேட்டாள் லீலா.

"இவ்வுலகில் சொர்க்கம் என்பது எங்கேயாவது இருக்கின்றதென்றால் அது இங்கே, இந்த மண்டபத்தில்

தான் உள்ளது என எழுதப்பட்டுள்ளது," என்று விடை யளித்தார் கேசவன்.

"இந்த இடத்தைப் பார்க்கும்போது அவ்வாறு எழுதி யிருப்பது முற்றிலும் உண்மைதான் எனத் தோன்றுகிறது," என்று தனது கருத்தைத் தெரிவித்தாள் லீலா.

"ஷா—ஜஹான் காலத்தில் இன்னும் அற்புதமான அழகுடன் திகழ்ந்ததாம் இது. தூண்கள் யாவும் விலை யுயர்ந்த ரத்தினங்களால் இழைக்கப் பெற்றிருந்தன. மண்டபத்தின் கூரையின் உட்புறம் முழுவதும் தங்கத் தகடுகளால் வேயப்பெற்று, வெள்ளியினாலும், தங்கத்தினா லுமாகிய கொடி, இலை, பூ போன்ற நேர்த்தியான வேலைப் பாடுகளால் அலங்கரிக்கப் பெற்றிருந்தது."

"விலையுயர்ந்த அந்த ரத்தினங்களும் தங்கமும் எங்கே போயின?"

"டில்லியின்மீது பிற்காலத்தில் படையெடுத்தவர் கள் அவைகளை எல்லாம் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டனர்."

"இத்தனை அழகான பொருள்களை யெல்லாம் எப்படித் தான் எடுத்துச் செல்ல மனம் வந்ததோ!" என வருத்தத் துடன் கூறினாள் லீலா.

"நடுவில் இருக்கும் இதோ இந்த மேடை என்ன?" என வினவினான் சேகர்.

"இங்கேதான் ஷா-ஜஹானின் புகழ்பெற்ற மயிலா சனம் வைக்கப்பட்டிருந்தது. முழுவதும் பொன்னாலேயே செய்யப்பெற்றது அது. மயிலின் தோகைகளில் நீலம், கெம்பு, மரகதம், முத்து போன்ற விலைமதிக்க முடியாத பலநிறக் கற்கள் பதிக்கப்பெற்று மிக்கப் பொலிவுடன் விளங்கியதாம் அவ்வாசனம்!"

"இப்போது அது எங்கே இருக்கின்றது?"

"ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன் நாதிர்ஷா என்னும் பாரசீக மன்னன் டில்லியின்மீது படையெடுத்து நகரைக் கொள்ளையடித்தான். அப்போது மயிலாசனத்தையும் எடுத்துக்கொண்டு போய் விட்டான்."

காஸ் மகால் எனப்படும் சக்கரவர்த்தியின் அந்தரங்க அரண்மனை, ரங்கமகால் எனப்படும் வர்ண மாளிகை, முத்து மசூதி ஆகியவற்றையும் அவர்கள் சுற்றிப் பார்த்தனர். பின்னர், செங்கோட்டையிலிருந்து புறப்பட்டு ஷா-ஜஹானால் கட்டப்பெற்ற ஜூம்மா மசூதியையும் டில்லியின் பிரதானக் கடைத்தெருவான 'சாந்தினி சவுக்'கையும் அவர்கள் பார்த்தனர்.

"ஷா-ஜஹான் காலத்தில் சாந்தினி சவுக்தான் முக்கியமான வீதி. இவ்வீதியின் வழியாகத்தான் சக்கரவர்த்தி மிகுந்த கோலாகலத்துடன் பவனி வருவார். இதேயிடத்திலேயே நாதிர்ஷா ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்று நகரைச் சூறையாடினன்," என்று 'சாந்தினி சவுக்'கைப்பற்றிக் கேசவன் குழந்தைகளுக்கு விவரமாக எடுத்துரைத்தார்.

நெருக்கமான தெருக்களைக் கடந்து, பிரிட்டிஷாரால் கட்டப்பட்ட புதுடில்லிப் பகுதிக்கு அவர்கள் வந்தனர். லக்ஷ்மி நாராயணர் கோவில், ஜந்தர் மந்தர், இன்னும் பல முக்கியமான இடங்கள் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்துவிட்டு அவர்கள் பங்களாவிற்குத் திரும்பிச் சென்றனர்.

மறு நாள் காலை அவர்கள் 'ராஜ் காட்'டிற்குச் சென்று, மகாத்மா காந்தியின் சமாதியின்மீது மலர் மாலை ஒன்றை வைத்து அவருக்கு வணக்கம் செலுத்தினர். பின்னர், சர்க்கார்க் காரியாலயங்கள் இருக்கும் கட்டிடங்களுக்குப் போனார்கள். ராஷ்ட்ரபதி பவனத்தையும்



*ராஜ்காட், காந்திஜியின் சமாதி*

அரசாங்க அலுவலகங்களாகப் பயன் படுத்தப்பெறும் வடபகுதி, தென்பகுதிக் கட்டிடங்களையும் அவர்கள் பார்த்தனர்.

எல்லாக் கட்டிடங்களையும் ஒருங்கே காணக்கூடிய வசதியான இடம் ஒன்றில் நின்றுகொண்டிருந்த நிர்மலா, "இங்கிருந்து பார்க்கும்போது இக்கட்டிடங்கள் எவ்வளவு அழகாகக் காட்சியளிக்கின்றன!" என்று வியப்புடன் கூறினாள்.

"இக்கட்டிடங்களின் தோற்றம் உண்மையிலேயே நேர்த்தியானதொரு காட்சிதான்! இப்புதுத் தலைநகரி லிருந்து நமது புராதனத் தலைநகரமான இந்திரப் பிரஸ்தம் இருந்த இடம் எவ்வளவு நன்ருகத் தெரிகின்றது, பார்த் தீர்களா!" என்று கேட்டார் கேசவன்.

"இக்கட்டிடங்கள் யாவும் எப்போது கட்டப் பெற்றன ?"

"இவை பிரிட்டிஷாரால் கட்டப்பெற்றவை. ஸர் எட்வின் லுட்யென்ஸ், ஸர் ஹெர்பர்ட் பேகர் என்னும் பிரபல கட்டிடக்கலை நிபுணர்கள் இவைகளைத் திட்டமிட்டுக் கட்டினார்கள். எட்டாவது டில்லியான இன்றையப் புது டில்லியையும் அவர்களே நிருமாணித்தனர். புதுடில்லியைக் கட்டும் வேலை சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் தொடங்கப் பெற்றது ; அது முடிவடையப் பதினெட்டாண்டுகள் ஆயின. இக்கட்டிடம் ஒவ்வொன்றிலும் நூற்றுக் கணக்கான அறைகள் உள்ளன. ராஷ்ட்ரபதி பவனத்தில் மட்டும் முந்நூற்று நாற்பதுக்கு மேற்பட்ட அறைகள் இருக்கின்றன."



ராஷ்ட்ரபதி பவனம்—மேலிருந்து தோற்றம்

"இதற்கு ராஷ்ட்ரபதி பவனம் என்று ஏன் பெயரிடப் பட்டுள்ளது?"

"ராஷ்ட்ரபதி இருக்குமிடம் இதுவே. முன்பு, பிரிட்டிஷார் அரசு புரிந்து கொண்டிருந்தபோது இது ராஜப் பிரதிநிதிகளின் வாசஸ்தலமாக இருந்தது. இக்கட்டிடத் திற்குப் பின்னுல் 'முகலாயர் தோட்டம்' என்னும் ஓர் அழகான சோலை இருக்கின்றது. அதை இன்னெரு நாள் பார்க்கலாம்" என்றுர் கேசவன்.

## வினக்கள்

1. டில்லியை 'அழியா நகரம்' என அழைப்பது எவ்வாறு பொருத்தமானது? ஐரோப்பாவின் 'அழியா நகரம்' எது என்பதை நீங்கள் சொல்ல முடியுமா?
2. இரும்புத் தூணைப்பற்றிய சிறப்பு யாது?
3. செங்கோட்டையில் நீ பார்க்க விரும்பும் முக்கியமான இடங்களைக் கூறுக.
4. அசோக ஸ்தம்பத்தைப் பார்லிமெண்ட் மாளிகைக் கருகில் கொண்டு வரவேண்டும் என்று நிர்மலா ஏன் எண்ணினுள்?
5. புதுடில்லி ஏன் எட்டாவது டில்லி என அழைக்கப்பெறு கின்றது?

# 4. பண்டை இந்தியாவில் குடியாட்சி

" 1853-இல் பிரிட்டிஷார் சட்டக் கவுன்ஸில் ஒன்றை ஏற்படுத்தினுர்கள் என்று நேற்றுக கூறினீர்களே, அவர்கள் வருவதற்கு முன்பு நம் நாட்டில் பார்லிமெண்ட் என்பதே இருந்ததில்லையா ?" என்று சேகர் மறுநாள் தனது தந்தையைக் கேட்டான்.

" இக்கேள்விக்கு விடையளிப்பது சற்றுச் சிரமந்தான். இன்றிருப்பதைப்போல் இந்தியா முழுவதற்கும் ஒரே பார்லிமெண்ட் என்று ஒன்று அக்காலத்தில் இருக்கவில்லை. ஆனுல், இதிலிருந்து பிரதிநிதித்துவ ஆட்சியில் நமக்கு அனுபவம் எதுவுமே முன்பு கிடையாது என முடிவு செய்துவிடக் கூடாது," என்ருர் கேசவன்.

" முற்காலத்தில் அரசர்களும் சக்கரவர்த்திகளுமே நம் நாட்டை ஆண்டு வந்திருப்பதாகத்தானே நாம் கேள்விப்பட்டிருக்கின்ரேம். மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட ஜனுதிபதி எவரைப் பற்றியும் நாம் கேள்விப்பட்டதில்லையே !" என்று சொன்னுள் லீலா.

" உண்மைதான். பெரும்பாலும் அரசர்களும் சக்கரவர்த்திகளுமே ஆட்சி செலுத்திவந்தனர். ஆனுல், இவ்வரசர்களில்கூடப் பலர் சர்வாதிகாரிகளாக இருக்கவில்லை. அமைச்சர்களின் ஆலோசனைப்படியும் தருமத்தை அனுசரித்துமே இவர்கள் அரசுபுரிய வேண்டியிருந்தது. புராதன இந்தியாவில் மன்னராட்சி என்னும் ஒரேவகை ஆட்சிமுறையே இருந்தது என்று சொல்லமுடியாது. இப்போதுள்ள முறையில் மக்கள் தங்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்கின்றனர் அல்லவா? அங்ஙனமே

அக்காலத்திலும் ஜனங்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படியான ஆட்சி முறைகளும் வழக்கிலிருந்தன.''

"நம் நாட்டில் ஜனநாயக ஆட்சிமுறை எப்போது, அப்பா, இருந்தது?'' என்று மிகுந்த ஆவலுடனும் ஆர்வத்துடனும் வினவினான் சேகர்.

"மிகத் தொன்மையான வேதகாலத்தில்கூட ஜனநாயக ஆட்சிமுறை நடைமுறையில் இருந்தது. பொதுவாகக் கோனாட்சியே வழக்கில் இருந்துவந்ததெனினும் வேறு ஆட்சி வகைகளும் இருந்தன. சில சமயம் அரசர்கள்கூட மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்பெற்றனர். அக்காலத்திய அற நூல்களில் சபை, சமிதி என்னும் மக்கட் சபைகள் அப்போதே வழக்கில் இருந்ததற்குத் தக்க சான்றுகள் காணக்கிடக்கின்றன.''

"இச்சபைகள் எப்பேர்ப்பட்டவை?'' எனக் கேட்டாள் லீலா.

"அவற்றின் திட்டமான அமைப்பைப் பற்றித் தெளிவாக எதுவும் தெரியவில்லை. ஆயினும், இச்சபைகள் மூலமாக, அரசாங்கத்தில் மக்களுக்குப் பங்கு இருந்தது என்பதும் இச்சபைகளின் ஆலோசனைகளைக் கேட்டே அரசன் ஆட்சிபுரிந்தான் என்பது உண்மை. வேத காலத்தின் பிற் பகுதியில்கூட இச்சபைகள் இருந்தனவென்பதற்கு அதர்வ வேதம், பிற்காலத்திய சம்ஹிதைகள், பிராம்மணங்கள் ஆகியவற்றில் போதிய ஆதாரங்கள் காணப்படுகின்றன.''

"முடியாட்சியைத் தவிர வேறு பல ஆட்சி முறைகளும் அக்காலத்தில் இருந்தனவென்று சொன்னீர்களே, ஜனநாயக அரசாங்கம் இருந்த சில ராஜ்யங்களைக் குறிப்பிட முடியுமா?'' என வினவினாள் நிர்மலா.

"ஓ, முடியும். கி.மு. ஆருவது நூற்ருண்டிலேயே அத்தகைய ஜனநாயக. அல்லது, குடியரசு நாடுகள் இருந்தன என்பதற்கு ஆதாரங்கள் உள. லிச்சாவிகள், சாக்கியர்கள், மல்லர்கள் முதலிய பல மக்கள் தொகுதியினரிடை, குடியரசுமுறை அரசாங்கமே வழக்கில் இருந்து வந்தது. மேலும், அவர்களில் சில பிரிவினர், சிறப்பாக, லிச்சாவிகள் என்போர் பண்டை இந்தியாவில் பேரும் புகழும் பெற்றுப் பெருமையுடன் விளங்கினர்."

"இக்குடியரசு ராஜ்யங்களில் எவ்வாறு ஆட்சி நடைபெற்றது?" என்ருன் சேகர்.

"துரதிர்ஷ்டவசமாக, இந்த ராஜ்யங்களின் அரசியலமைப்பைப்பற்றிய திட்டமான விவரங்கள் மிகமிகக் குறைவாகவே கிடைத்துள்ளன. முழு ராஜ்யமும் நிர்வாக வசதிக்காகச் சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்றும், ஒவ்வொரு பகுதியிலும் ஸ்தல நிர்வாகத்தை நடத்துவதற்கான நல்ல அமைப்பொன்று இருந்ததென்றும் தெரிகின்றது. முழு ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பு இந் நிர்வாகப் பகுதிகளின் தலைவர்களடங்கிய சபையிடமே ஒப்புவிக்கப்பட்டிருந்தது. இச்சபையின் தலைவர் குறிப்பிட்ட ஒரு காலத்திற்குத்தான் தேர்ந்தெடுக்கப்படுவார். இவருடைய மேற்பார்வையில்தான் ராஜ்ய நிர்வாகம் நடந்து வந்தது. சபை மிகவும் பெரியதாக இருந்தால் அதன் உறுப்பினர்களிடையிருந்து நிர்வாகக் குழு ஒன்று தேர்ந்தெடுக்கப்படும். சபையில் இளைஞர்களும் முதியவர்களும் வேறுபாடு எதுவுமின்றி அங்கத்தினர்களாயிருந்தனர். இச்சபை கூடுமிடத்திற்கு 'ஸந்தாகரம்' என்று பெயர். புத்தர் பெருமானைக்கூட இச்சபைகள் பெரிதும் கவர்ந்தனவாம்; இவற்றின் அமைப்பு முறையைப் பின்பற்றியே தமது மதச் சங்கங்களை அவர் நிறுவினர் எனச் சொல்லப்படுகின்றது."

"ஜனுதிபதிகள், மக்கட் சபைகள் என்றெல்லாம் அக்காலத்திலேயே நம் நாட்டிலிருந்தன என்பதைக் கேட்பதற்கு எனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகின்றது," எனக் கூறினுன் சேகர்; அவனுடைய குரலில் மன நிறைவும் பெருமிதமும் தொனித்தன.

"இந்த ராஜ்யங்களைப்பற்றி இன்னும் மிகுதியான தகவல் எதுவும் தெரியாதா?" என்று மிக்க ஆவலுடன் அவன் கேட்டான்.

"இக்குடியரசுகளில் நியாயம் எங்ஙனம் வழங்கப் பெற்றது என்பதைக் குறித்துச் சில விவரங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. ஏழு நீதிமன்றங்கள் ஒருவனைக் குற்றவாளியெனக் கருதினுலொழிய அவனுக்குத் தண்டனை அளிக்க முடியாது என்பதிலிருந்து, அந்நீதிமுறை மக்களின் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதில் எத்தனை அக்கரை கொண்டிருந்தது என்பதும், எவ்வளவு தூரம் அது ஜனநாயக முறையைப் பின்பற்றியதாயிருந்தது என்பதும் தெளிவாகின்றன. இதைக் கவனிக்கும்போது நமக்கு மிக்க வியப்பு உண்டாகின்றது அல்லவா?"

"அது எங்ஙனம் சாத்தியமாகும், அப்பா?" என்ருன் சேகர்.

"ஒரு நபர்மீது குற்றம் சாட்டப்பெற்ருல் முதலில் அந்நபர் விரிச்சய மகாமட்டர்கள் என்னும் அதிகாரிகளின் முன்னர் விசாரணைக்கு அனுப்பப்படுவான். அவன் குற்றம் செய்யவில்லை என அவர்கள் கருதினுல் அவன் விடுவிக்கப் படுவான். ஆனுல், அவன் குற்றவாளியே என அவர்கள் தீர்மானித்தால் அவனுக்குத் தண்டனை வழங்க அவர்களுக்கு அதிகாரம் கிடையாது; அடுத்த மேல்நீதி மன்றத்திற்கு அவனை அனுப்பிவிடவேண்டும். இங்ஙனம் ஆறு நீதிமன்றங்களில் அவன் விசாரிக்கப்படுவான். ஒவ்

வொன்றும் அவன் குற்றவாளி அல்ல என்று நினைத்தால் அவனை விடுவித்துவிடலாம். ஆனால் குற்றவாளியெனக் கண்டால் அவனை அடுத்த மேல்நீதிமன்றத்திற்கு அனுப்ப முடியுமே தவிர, அவனுக்குத் தண்டனை அளிக்கும் அதிகாரம் அதற்குக் கிடையாது. கடைசி நீதிமன்றத்தில் ஜனாதிபதி மட்டுமே இருப்பார்; தண்டனை வழங்கும் அதிகாரம் அவருக்குத்தான் உண்டு. அங்ஙனம் தண்டனை வழங்கும்போதுகூட நாட்டின் சட்டத்தையும் முந்திய தீர்ப்புக்களையும் பின்பற்றித்தான் அவர் தீர்ப்பளிக்க வேண்டும். இவ்வாறாக அக்காலத்தில் தனியொருவரின் சுதந்திரம் ஒப்பற்ற முறையில் நன்கு பாதுகாக்கப்பட்டு வந்தது.''

''ஆகா! எத்தகைய போற்றத்தக்க முறை நம்மிடை இருந்திருக்கின்றது! ஏன் அது மறைந்துபோயிற்று?'' என வினவினாள் லீலா.

''கி. மு. நான்காம் நூற்றாண்டுவரையிலுங் கூட அத்தகைய ஜனநாயக ராஜ்யங்கள் நம் நாட்டில் இருந்து வந்தன. இந்த ஜனநாயக ராஜ்யங்களையன்றி, பிரபுக்கள் சபைகளினால் ஆளப்பட்டுவந்த ராஜ்யங்களும் இருந்தன. இத்தகைய சபையொன்றில் ஐயாயிரம் அங்கத்தினர்கள் இருந்தனராம்! சந்திரகுப்தர், அசோகர் ஆகிய மன்னர்களின் மௌரிய சாம்ராஜ்யம் விரிவடைந்தபோது இச்சிறிய, தனி ராஜ்யங்கள் அனைத்தும் மறைந்துவிட்டன.''

''அதற்குப்பிறகு ஜனநாயக ராஜ்யங்கள் எதுவுமே இருக்கவில்லையா?'' எனக் கேட்டான் சேகர்.

''ஓ, இருந்தன. மௌரிய சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்குப் பின்னர் ஔதேயர், மாலவர், ஆர்ஜுனயனர் என்னும் சாதியினர் பலர் குடியரசு முறையில் ராஜ்யங்களை நிறுவினர். ஆனால், கி.பி. நான்காவது நூற்றாண்டில் சமுத்திர

குப்தன் பல ராஜ்யங்களே வென்று, தனது ஆதிக்கத்தைப் பெருக்கியபோது இந்த ராஜ்யங்களிற் பல தங்கள் முக்கியத்துவத்தை இழந்து விட்டன. எனவே, கி.பி. ஐந்தாவது நூற்றுண்டு வரையிலுங்கூட ஜனநாயக ராஜ்யங்களும் குடியாட்சி முறை அரசாங்கமும் இருந்து வந்தன எனச் சொல்லலாம்.''

''நமது காலம்வரை அவை தொடர்ந்து இல்லாமற் போனது வருத்தத்திற்குரியதே!'' எனப் புகன்ருள் லீலா.

''நீ சொல்வது சரிதான். ஆனுல், நம் நாட்டில் ஏற்பட்ட பல நிகழ்ச்சிகள் இப்பேர்ப்பட்ட ஜனநாயக ராஜ்யங்கள் மீண்டும் தோன்ற முடியாதபடி தடுத்து விட்டன. முடியாட்சி என்னும் கருத்து மிக்க வலுப் பெற்றது. மேலும், அயல் நாட்டினர் பலர் அடிக்கடி நமது தேசத்தின்மீது படையெடுத்து வெற்றிகொண்டனர். அதனுல் நாட்டின் அமைதி பாதிக்கப்பட்டது. எனவே, படையெடுத்து வரும் அன்னியர்களுடன் போரிடுவதற்குப் பலம்பொருந்திய அரசன் ஒருவன் இருப்பதுதான் சிறந்தது என்னும் எண்ணத்திற்கு மிகுந்த ஆதரவு ஏற்படத் தொடங்கியது. இம்மாதிரியான படையெடுப்புகள் முகலாய சாம்ராஜ்யம் ஏற்படும்வரை அடிக்கடி இருந்துவந்தன என்பதும் முகலாயரின் ஆட்சி பதினெட்டாவது நூற்றுண்டுவரை நீடித்திருந்தது என்பதும் உங்களுக்குத்தான் தெரியுமே!''

''குப்த சாம்ராஜ்யத்திற்குப் பிறகு ஜனநாயக அரசாங்கமே இருக்கவில்லே, இல்லேயா?'' என்ருன் சேகர்.

''அப்படிச் சொல்லிவிடமுடியாது. அக்காலமுதல் ஜனநாயக ராஜ்யம் என்ருென்று இல்லாமற்போனுலும் நம் கிராமங்களில் ஒருவகை ஜனநாயக அரசாங்கம் வழக்கில் இருந்துவந்தது. அதிக மாறுதல் எதுவுமின்றி அது

பிரிட்டிஷார் வரும் வரையிலுங்கூட' நடைமுறையில் இருந்தது.''

"அப்படியா? நம் கிராமங்களில்கூடச் சுயாட்சி இருந்ததா என்ன?'' என்று பேராவலுடன் வினவினுள் லீலா.

"இப்போதிருக்கும் பஞ்சாயத்து* முறையைப் போன்றதா அது?'' என்ருன் சேகர்.

"ஆம். ஏறக்குறைய அதைப்போன்றதுதான். ஆனல், பண்டை நாட்களில் இருந்த பஞ்சாயத்துக்களுக்கு இப்போதிருப்பவற்றைவிட மிகுதியான அதிகாரம் இருந்தது. தென்னிந்தியாவிலுள்ள சோழர், பாண்டியர் காலத்துக் கல்வெட்டுக்களிலிருந்து, கிராம நிர்வாக முறை



கிராமப் பஞ்சாயத்து சபை

* கிராமத்தின் நிர்வாகத்தைக் கவனித்துக்கொள்ளும் ஐவர் கொண்ட சபை.

யைப்பற்றிக் கிட்டத்தட்ட முழுவிவரமும் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டுகளின்படி, கிராமமோ, கிராமங்கள் சில வற்றின் தொகுதியோ ஒரு சமூகமாக அமைந்திருந் தது; சுயாட்சி நடைபெறும் மிகச்சிறிய அமைப்பு இச் சமூகந்தான். இத்தகைய சமூகம் ஒவ்வொன்றிற்கும் ஒரு சபை இருந்தது. அரசனுடைய அதிகாரிகளின் மேற் பார்வையின்கீழ், இச்சபையே கிராமத்தின் முழுநிர்வா கத்தையும் கவனித்துவந்தது. பொதுக் கட்டிடங் களையும் கோவில்களையும் பராமரித்தல், சட்டத்தை அமுல் நடத்திக் கிராமத்தில் அமைதி நிலவும்படி செய்தல், பெருங் குற்றங்களைத் தவிர மற்றெல்லாச் சண்டை சச்சரவு களையும் விசாரணை செய்தல், நன்கொடை ஸ்தாபனங்களை நிர்வகித்தல், சந்தைகளைக் கட்டுப்படுத்துதல் முதலிய அலுவல்கள் பலவும் இதன் பொறுப்பில்தான் விடப்பட் டிருந்தன. ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு 'கமிட்டி' அல்லது குழு இருக்கும். இக்குழுக்களின் மூலமாகவே கிராமத்தின் அலுவல்கள் அனைத்தையும் இச்சபை கவனித்துவந்தது. தகுதிவாய்ந்த நன்மக்களிடையிருந்தே இச்சபைகளின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட னர். மேலும், இக்குழுக்கள் எதிலும் மூன்றுண்டுகளாக அங்கம் வகிக்காதவர்களிடையிலிருந்தே, புதிய உறுப்பினர் கள் தேர்ந்தேடுக்கப்படவேண்டும் என்ற கட்டுப்பாடு இருந்தது; இதனால் இக்குழுக்களில் அலுவல் புரிவதற்குக் கிராமத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் வாய்ப்புக் கிடைத் தது. இக்குழுக்கள் சிலவற்றில் பெண்களும் அங்கத்தினர் களாயிருந்தனர். இதிலிருந்து, அக்காலத்தில் ஜனநாயக ஆட்சி முறையில் எவ்வளவு தூரம் நாம் முன்னேறியிருந் தோம் என்பது விளங்குகின்றதல்லவா? இதைக் கேட்க உங்களுக்கு நிரம்ப மகிழ்ச்சியாக இருக்கும், இல்லையா?"

"ஆம். சுதந்திரம் அடைந்து மீண்டும் நாமே நமது மன்னர்களாய் இப்போது இருக்கின்றோம். எனவே, நமது கிராமங்களில் மறுபடியும் அம்மாதிரியான சிறந்த நிர்வாக முறை வரும் என நம்புகிறேன்," என்றாள் லீலா.

## வினாக்கள்

1. பண்டைக் குடியரசுகளில் வழக்கிலிருந்த நீதி முறையின் சிறப்பியல்பு யாது?
2. பண்டைய பஞ்சாயத்துக்களின் முக்கியமான அலுவல்கள் யாவை?
3. பண்டை ஜனநாயக ஆட்சி முறையின் வீழ்ச்சிக்குக் காரணம் யாது?

## 5. நமது பார்லிமெண்ட் வளர்ந்த கதை

"நம் நாட்டில் பார்லிமெண்ட் தோன்றி வளர்ந்த கதையை எங்களுக்குச் சொல்லுங்கள்," என லீலாவும் சேகரும் மறுநாள் தங்கள் தந்தையிடம் கேட்டனர்.

"இப்போது நமக்குத் தெரிந்திருக்கும் பார்லிமெண்ட், பிரிட்டிஷார் இந்தியாவிற்கு வந்த பிறகுதான் ஆரம்பிக்கப் பெற்றது. ஆனால், நான் ஏற்கனவேயே கூறியிருப்பது போல், பிரதிநிதித்துவ சபைகள் நம் நாட்டு மக்களுக்குப் புதியனவல்ல. வேத காலத்திலேயே அத்தகைய சபைகள் இருந்தன. அவற்றிற்குச் 'சபைகள்' என்றும் 'சமிதிகள்' என்றும் பெயர். தேர்தல்களும் வழக்கில் இருந்தன. சில சமயம் அரசர்கள்கூடத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். பல ராஜ்யங்கள் அரசர்களில்லாத குடியரசுகளாகவே விளங்கின. அவற்றின் தலைவர்கள் அவ்வப்போது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். வேதங்கள், இராமாயணம், மகாபாரதம் போன்ற நம் நாட்டின் புராதன நூல்களிலிருந்து இச்சபைகள், சமிதிகள் பற்றிய விவரங்களை நாம் தெரிந்துகொள்ளலாம்," என்று கூறினார் கேசவன்.

"இச்சபைகளுக்கு என்ன நேர்ந்தது? ஏன் அவை இப்போது இருக்கவில்லை?" என வினவினாள் லீலா.

"ஹிந்து அரசர்களும் சக்கரவர்த்திகளும் அரசாண்டு கொண்டிருந்தவரை இச்சபைகளும் இருந்தன. முஸ்லிம் ஆட்சி ஏற்பட்டவுடன் இச்சபைகள் யாவும் அலுவல் புரிய முடியாமற்போய்விட்டன; படிப்படியாக இவை மறைந்தொழிந்தன. அப்போதுகூடக் கிராமங்களில் மக்களின் பிரதிநிதித்துவ ஆட்சியே கிராமப் பஞ்சாயத்துகள் மூலமாக

நடைபெற்றுவந்தது. அரசனின் அல்லது சக்கரவர்த்தியின் மத்திய அரசாங்கம் பெரும்பாலும் அவற்றில் தலையிடுவதில்லை."

"ஆனால், இக்கிராமப் பஞ்சாயத்துகள்கூட இப்போது இல்லையே!" என்றாள் நிர்மலா.

"பிரிட்டிஷார் நம் நாட்டை ஆளத்தொடங்கிய பின்னர், அதிகாரம் முழுவதும் தங்களிடத்திலேயே இருக்கும்படியாகச் செய்துகொண்டனர். இதனால், நமது ஸ்தல சுயாட்சி ஸ்தாபனங்கள் மறைந்துபோயின. மக்கள் அவற்றை மறந்துகூடப் போய்விட்டனர்."

"அங்ஙனமாயின் இப்போதிருக்கும் பார்லிமெண்ட் எப்படித் தோன்றியது?" எனக் கேட்டான் சேகர்.

"சென்ற நூற்றாண்டின் மத்தியில் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியா முழுவதையும் தனது ஆதிக்கத்தின்கீழ் கொணர்ந்து, 'கவர்னர்-ஜெனரல்' என்பவர் மூலமாக நாட்டின் நிர்வாகத்தை நடத்திவந்தது. அவருக்கு உதவி புரியும்பொருட்டு 'எக்சிகியூடிவ் கவுன்சில்' அல்லது நிர்வாக சபை ஒன்று இருந்தது. 1853-இல் மேலும் சில அங்கத்தினர்களை நியமித்து, நாட்டின் நிர்வாகத்திற்குத் தேவையான சட்டங்களை நிறுவுவதற்கென ஒரு சட்ட சபையை அது ஏற்படுத்தியது. இச்சட்டசபையே இப்போதிருக்கும் பார்லிமெண்ட்டிற்கு முன்னோடி எனச் சொல்லலாம்."

"இச்சபை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதில்லையா?"

"இல்லை. அக்காலத்தில் தேர்தல் என்பதே கிடையாது. மக்களுக்கு 'ஓட்'உரிமை அல்லது வாக்குரிமை என்பதுமில்லை. கம்பெனியால் நியமிக்கப்பெற்ற ஆட்சித் தலைவர்களுக்கு இந்தியாவைப்பற்றியோ, அதன்

பழக்க வழக்கங்களைப் பற்றியோ மிகுதியாக எதுவும் தெரியாது. அவர்களுடைய நாட்டிலேயே, அதாவது, இங்கிலாந்திலேயே மக்களுக்கு அப்போது வாக்குரிமை இருக்கவில்லை. தவிரவும், 1857-இல் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டவுடன் நாட்டில் பெருங்கிளர்ச்சி ஒன்று உண்டாயிற்று. அதுவே 'முதலாவது இந்தியச் சுதந்திரப் போர்' எனப்படுகின்றது. அக்கிளர்ச்சிக்குப் பின்னர், நாட்டின் நிர்வாகம் கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடம் மாற்றப்பட்டது. இங்கிலாந் தின் அரசி இந்தியாவின் சக்கரவர்த்தினியானாள். அவளுக் குப் பிறபட்டு வந்த பிரிட்டிஷ் மன்னர்கள் 'இந்தியாவின் சக்கரவர்த்தி' எனத் தங்களை அழைத்துக்கொண்டனர்."

"இங்கிலாந்தில் இருந்துகொண்டு நம் நாட்டை அவர்கள் எங்ஙனம் அரசாண்டனர்?" என லீலா வின வினாள்.

"நம்மை ஆள்வதற்காக ராஜப் பிரதிநிதி ஒருவரை நியமித்து அவரை இங்கே அனுப்பினர். நாட்டை ஆள்வ தில் அவருக்கு உதவிபுரியவும் ஆலோசனை கூறவும் இன்னும் சில நபர்களையும் அவர்கள் நியமித்தனர்."

"மக்களால் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லையா?" எனச் சேகர் கேட்டான்.

"இல்லை. அவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படவு மில்லை; மக்களுக்குப் பொறுப்புள்ளோராகவுமில்லை. சட்ட சபையில் ஒரு சில நியமிக்கப்பெற்ற உறுப்பினர்களே யிருந்தனர்; அவர்களுக்கும் அதிகாரம் மிகமிகக் குறை வாகவே யிருந்தது. மக்களுக்கு அரசாங்கத்தில் ஒரு பங்குமில்லை; அதன் அலுவல்களையோ, தீர்மானங்களையோ கட்டுப்படுத்தும்படியான வழிவகையும் மக்களிடத்தில் இருக்கவில்லை. ஆகவே, நாட்டுப்பற்று மிகுந்த சிலர்

ஒன்றுசேர்ந்து 1885-இல் 'இந்தியத் தேசீய காங்கிரஸ்' என்னும் புகழ்பெற்ற ஸ்தாபனத்தை ஏற்படுத்தினர். பிற்காலத்தில் பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடி நாட்டிற்குச் சுதந்திரம் பெற்றுக்கொடுத்தது இம்மகத்தான ஸ்தாபனமே. ஆயினும், அக்காலத்தில் அதன் இலட்சியம் அதுவன்று. அரசாங்கத்திலும் சட்டசபையிலும் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் பெறுவதும் சட்டசபையை மக்களால் தேர்ந்தெடுக்கப்பெறுமாறு செய்வதுமே அதன் நோக்கங்களாக இருந்தன."

"தான் விரும்பியதைக் காங்கிரஸ் எவ்வாறு அடைந்தது?"

"ஒவ்வோராண்டும் கூட்டங்கள் நடத்தி, மக்களின் குறைகளையும் கோரிக்கைகளையும் அரசாங்கத்திற்குத் தெரிவித்துவந்தது."

"அரசாங்கம் அவர்களின் கோரிக்கைகளுக்கு இணங்கியதா?"

"உடனே இணங்கிவிடுமா? ஆனால், காங்கிரஸ் ஸ்தாபனம் தனது கோரிக்கைகளைத் தெரிவிப்பதைமட்டும் நிறுத்தவில்லை; எனவே, சர்க்கார் சில சீர்திருத்தங்களைச் செய்யவேண்டியதாயிற்று. எடுத்துக்காட்டாக, 1892-இல் சட்டசபை ஸ்தானங்களை அதிகப்படுத்தவும் சில ஸ்தல ஆட்சி ஸ்தாபனங்கள், சங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளாகச் சிலரை நியமிக்கவும் அரசாங்கம் ஒத்துக்கொண்டது."

"இவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களா?"

"இல்லை. ஒருவராவது தேர்ந்தெடுக்கப்பெறவில்லை. பிற அங்கத்தினர்களைப் போலவே இவர்களும் ராஜப் பிரதிநிதியினால் நியமிக்கப்பட்டவர்களே; ஒரு வித்தியாசம்

என்னவென்ருல், சில ஸ்தல ஆட்சி ஸ்தாபனங்கள், சங்கங்கள்—இவற்றின் சிபாரிசுகளின்பேரில் இவ்வங்கத்தினர்கள் நியமிக்கப்பெற்றனர்.''

"இச்சீர்திருத்தங்களால் காங்கிரஸ் திருப்தியடைந்துவிட்டதா?''

"இல்லே. திருப்தியடைந்துவிடவில்லே. நல்லாட்சியைவிடச் சுயாட்சியே மேலானது எனக் காங்கிரஸ் கருதியது. சுயராஜ்யம் என்னும் கருத்து இவ்வாறு உருவாயிற்று. காங்கிரஸின் குறிக்கோள் சுயராஜ்யமே என 1906-இல் அறிவிக்கப்பட்டது. சுயராஜ்யம் என்ருல் என்ன என்பதைப்பற்றிக் காங்கிரஸில் இரு கட்சிகள் ஏற்பட்டன. சுயராஜ்யம் என்ருல் பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து முழுச் சுதந்திரம் பெறுதல் என்று சில காங்கிரஸ்காரர்கள் நினைத்தனர். வேறு சிலர், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின்கீழ் பொறுப்புள்ள சுயாட்சியே சுயராஜ்யம் எனப் பொருள் கொண்டனர். எனவே, ஒரு பகுதியினர் பிரிட்டிஷ் ஆட்சியின் முடிவிற்காகக் கிளர்ச்சி செய்தனர். மற்ருெரு பகுதியினர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின்கீழ், முழுவதும் இந்தியர்களாலேயே நடத்தப்பெறும் பொறுப்புள்ள சுயாட்சியே வேண்டுமெனக் கோரினர்.''

"இரண்டாவது கோரிக்கைக்காவது பிரிட்டிஷ் அரசாங்கம் இணங்கியதா?''

"இல்லே, இணங்கவில்லே. சட்டசபை அங்கத்தினர்களே மக்கள் நேரிடையாகத் தேர்ந்தெடுப்பதற்குக்கூட அது ஒத்துக்கொள்ளவில்லே. 1909-ஆம் ஆண்டிற்குள்ளாக அது செய்ய இசைந்ததெல்லாம் சட்டசபை ஸ்தானங்களே அதிகப்படுத்தவும் குறிப்பிட்ட சில வகுப்புக்களாலும் ஸ்தாபனங்களாலும் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற இந்திய அங்கத்தினர்கள் மேலும் சில

ரைச் சட்டசபையில் சேர்த்துக்கொள்ளவும் இணங்கி யதுதான்; சட்டசபைக்குச் சற்று அதிக அதிகாரத்தையும் அது வழங்கியது. மேலும், முதன்முதலாக இந்தியர் ஒரு வரை ராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபையில் நியமித்தது.''

''ஆனால், மக்களின் கோரிக்கைகளைக் கவனிக்கும் போது அரசாங்கம் செய்தவை மிகமிகக் குறைவென்றே தோன்றுகிறது,'' என்றான் சேகர்.

''ஆம். தவிரவும், மக்களுக்குப் பிடிக்காத சில நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்துக்கொள்ளத் தொடங்கியது. இந்நடவடிக்கைகளைக் கண்டு மக்கள் வெகுண்டனர்; பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஒழிப்பதற்கு அவர்களும் பலாத்காரமான வழிகளைக் கையாளத் தொடங்கினர். நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் புரட்சி இயக்கங்கள் தலையெடுத்தன. மக்கள் தங்களது இலட்சி யத்தை அடைவதற்காகத் துப்பாக்கிகளையும் குண்டுகளை யும் உபயோகிக்கத் தொடங்கினர்.''

''பிரிட்டிஷாருக்கு அது நல்ல பாடம் கற்பித் திருக்குமே!''

''ஆனால், சர்க்கார் மிகுந்த பலத்துடன்கூடியது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. சர்க்காரிடத்தில் ராணுவ பலமும் போலீஸ் பலமும் மிகுதியாக இருந்தன. பலாத்காரமான இவ்வியக்கங்களை அடக்குவதற்கு அவற் றைப் பயன்படுத்த அரசாங்கம் சிறிதும் தயங்கவில்லை. ஏராளமானபேர்களைக் கைதுசெய்து சிறையில் தள்ளியது.''

''ஐயோ, எத்தனை பயங்கரமான நிலைமை!'' என்றாள் லீலா.

''ஆம். உண்மையில் நிலைமை அப்படித்தான் இருந்தது. ஆனால், மக்கள் தீர்மானத்துடன் தங்களுடைய குறிக்கோளை அடைவதற்காக எந்த விதமான துன்பத்தை

யும் அனுபவிக்கத் தயாராயிருந்தனர். கிளர்ச்சி நீடித்தது. நாடெங்கிலும் ஒரே குழப்பமும் கொந்தளிப்புமாக இருந்தது. ஆகவே, 1919-இல் அரசாங்கம் மேலும் சில சீர்திருத்தங்களைச் செய்வதற்கு இணங்கவேண்டியதாயிற்று. இச் சீர்திருத்தங்களின்படி, சட்டமன்றம் மாற்றியமைக்கப் பெற்றது. சட்டசபை, ராஜ்யசபை என்று இரண்டு சபைகள் அமைக்கப்பெற்றன. இவ்விரு சபைகளின் அங்கத்தினர்களில் பெரும்பாலோர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். ஆனால், 'ஓட்'செய்யும் உரிமை ஒரு சிலருக்கே அளிக்கப்பட்டிருந்தது. சட்டமன்றத்திற்கும் அதிகப்படியான அதிகாரம் வழங்கப்பட்டது. எனினும், அரசாங்கம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகளுக்குப் பொறுப்புள்ளதாயிருக்கவில்லை."

"காங்கிரஸ் அப்போதும் திருப்தியடைந்திருக்காதே?" என்றாள் லீலா.

"ஆனால், படைபலம் மிகுந்த பிரிட்டிஷ் சர்க்காருடன் காங்கிரஸினால் எப்படிப் போராடமுடிந்தது?" எனக் கேட்டான் சேகர்.

"அச்சமயத்தில்தான் இந்தியாவில் ஒரு மகான் தோன்றினார்; நம் விடுதலைப் போராட்டத்திற்கு வழிகாட்டி நம்மை வெற்றிக்கு அழைத்துச் சென்றவர் அவரே," எனப் பதிலளித்தார் கேசவன்.

"காந்திஜியைத்தானே குறிப்பிடுகிறீர்கள்?" என்று லீலாவும் சேகரும் ஒரே சமயத்தில் வினவினர்.

"ஆம், மகாத்மாகாந்திதான். பிரிட்டிஷாரை எதிர்த்து நடத்திய போராட்டத்தில் விந்தையான புதிய ஆயுதம் ஒன்றை அவர்தாம் நமக்குக் காண்பித்தார்."

"அது என்ன ஆயுதம்?" என்று கேட்டாள் லீலா.

"அணுகுண்டைப் போன்றதா?" என்றான் சேகர்.

"இல்லை, இல்லை" என்று இளநகையுடன் கூறினர் கேசவன்; "அது எந்த விதமான குண்டையும் போன்றதன்று. ஆயினும், ஒரு வகையில் அணுகுண்டை விட, ஏன், அதைக் காட்டிலும் பெரிய, பெரிய குண்டுகளையும் விடச் சக்திவாய்ந்ததாயிருந்தது."



மகாத்மா காந்தி

"அப்படியானல் அது என்ன ஆயுதம்?" என்று மீண்டும் கேட்டனர் குழந்தைகள்.

"சத்தியாக்கிரகம் அல்லது அகிம்சைப் போராட்டம். வீரர்கள் போரிட்டுப் பிறரைக் கொல்வதற்கு உபயோகிக்கும் போர்க்கருவியன்று அது. சத்தியம், அகிம்சை இவற்ருலான ஆயுதமே அது!"

"அத்தகைய கருவியைக்கொண்டு நம்மவர்களால் எப்படிச் சண்டை செய்யமுடிந்தது?"

"அதை எங்ஙனம் பயன்படுத்துவது என்பதையும் காந்திஜியே கற்றுக் கொடுத்தார். பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகத் தமது முதல் சத்தியாக்கிரகப் போராட்டத்தை இந்தியாவில் 1921-இல் அவர் ஆரம்பித்தார். நாடெங்கிலும் அவர் சுற்றுப் பிரயாணம் செய்தார். நமது வரலாற்றிலேயே அதுகாறும் எவரும் கண்டிராத அளவிற்கு மக்களிடைத் தேசீய உணர்ச்சியை எழுப்பினர்.



*சத்தியாக்கிரகம்*

அரசாங்கத்துடன் ஒத்துழைக்காமலிருக்கும்படியாகவும் அதன் அநியாயச் சட்டங்களை அமைதியான அகிம்சை முறையில் எதிர்க்கும்படியாகவும் மக்களிடம் கூறினர். அவருடைய அறைகூவலைக் கேட்டவுடன் நாடே திரண் டெழுந்தது. ஆயிரக்கணக்கானவர்கள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இவ்விசித்திரப் போராட்டத்தில் பங் கெடுத்துக்கொள்ள முன்வந்தனர்."

"அரசாங்கம் என்ன செய்தது?"

"இந்த இயக்கம் விரைவிலே அடங்கிவிடும் என அரசாங்கம் முதலில் எண்ணியது. காந்திஜியையும் நாடு முழுவதிலுமிருந்த வேறு பலரையும் சிறையில் அடைத்தது. மக்கள் அமைதியாக நடத்திய போராட்டங்களை அடக்கு வதற்காகப் போலீஸ் படையையும் ராணுவத்தையும் பயன் படுத்தியது. இதனல் மக்களும் பலாத்காரத்தில் இறங்க

முற்பட்டனர். எனவே, காந்திஜி தற்காலிகமாக இவ் வியக்கத்தை நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று.''

''ஏன் அதை அவர் நிறுத்தவேண்டும்?'' என வினவினன் சேகர்.

''ஏனெனில், அகிம்சை வழியையே மக்கள் எப்போதும் பின்பற்றவேண்டும் என்பது காந்திஜியின் விருப்பம். மக்களை அடக்குவதற்காக அரசாங்கம் பலாத்காரத்தை உபயோகித்தாலுங்கூட, பதிலுக்கு அவர்கள் கொடுமைச் செயல்களில் இறங்கக்கூடாது எனக் காந்திஜி கூறினர். இதற்கிடையில், சட்டமன்றத்திற்குள்ளும் இப்போராட்டத்தை நடத்தவேண்டும் எனச் சில காங்கிரஸ்காரர்கள் நினைத்தனர்.

''போராட்டத்தைச் சட்ட மன்றத்திலும் அவர்களால் எப்படி நடத்த முடிந்தது?'' என்று கேட்டாள் லீலா.

''தேர்தல்கள் மூலமாகச் சட்டமன்றத்தின் அங்கத்தினர்களாகி, கொடுமையான சட்டங்களை அரசாங்கம் இயற்றுவதை அவர்கள் தடுத்தனர். மக்களின் விருப்பத்திற்கெதிராக அரசாங்கம் நடக்கும்போதெல்லாம் அவர்கள் அதைத் தீவிரமாகக் கண்டித்தனர். அரசாங்கம் எளிதான முறையில் நடைபெற முடியாமல் அவர்கள் பல தடங்கல்களை ஏற்படுத்தினர்.''

''வெளியே நடந்துவந்த போராட்டம் இதனுல் மிக்க வலுப்பெற்றிருக்குமே!'' என்ருன் சேகர்.

''ஆம். 1930-இல் காந்திஜி மீண்டும் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார். இதற்கிடையில் காங்கிரஸ், நாட்டின் முழுவிடுதலையே தனது இலட்சியம் எனத் தீர்மானித்து, காந்திஜியின் தலைமையில் அதற்காகப் போராடிப் பிரிட்டிஷ் ஆட்சியை ஒழிக்கவேண்டும் என உறுதி கொண்டது. வரிகளைக் கொடுக்கக்கூடாது, அநியாய

மான சட்டங்களை மீறவேண்டும், அயல் நாட்டுப் பண்டங்களை, முக்கியமாக, வெளி நாட்டுத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டும் எனக் காந்திஜி மக்களிடம் கூறினார். சாராயம், வெளிநாட்டுத்துணி ஆகியவற்றை விற்கும் கடைகளின் முன் மறியல்செய்து அங்கே வாங்கவருவோர்களிடம் அவற்றை வாங்காமலிருக்கும்படி அமைதியுடன் சொல்ல வேண்டும் என்றும் காந்திஜி கூறினார். நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஆயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் இவ்விசித்திரத் தலைவரின்கீழ்ப் போராட முன்வந்தனர்; எல்லா நகரங்களிலும் ஊர்களிலும் சத்தியாக்கிரகப் போராட்டத்தை அவர்கள் நடத்தினர்.''

"சர்க்கார் அப்போது என்ன செய்தது?''

"சத்தியாக்கிரகிகள் எல்லோரையும் கைதுசெய்து சிறையில் தள்ளியது. போலீஸைக்கொண்டு அவர்களைத் தடியினால் அடிக்கும்படி செய்தது.''

"சத்தியாக்கிரகிகள் திருப்பியடித்தார்களா?''

"இல்லை. எப்பேர்ப்பட்ட நிலைமையிலும், சாகவேண்டியிருந்தாலுங்கூட, அவர்கள் திருப்பியடிக்கக்கூடாது எனக் காந்திஜி கூறியிருந்தார்.''

"ஐயோ, பாவம்! அவர்கள் மிகவும் துன்புற்றிருப்பார்களே!'' என்று ஆழ்ந்த அனுதாபத்துடன் கூறினாள் லீலா.

"சத்தியாக்கிரகிகள் அனைவரையும் அடித்துச் சிறையில் தள்ளியபின்னர் என்ன நடந்தது?'' என்று கேட்டான் சேகர்.

"அதே மாதிரி சத்தியாக்கிரகம் செய்ய இன்னும் சிலர் முன்வந்தனர். அவர்களைக் கைதுசெய்தவுடன் மேலும் சிலர் வந்தனர். அதற்கு முடிவே இருக்காது போலத் தோன்றியது. சிறைச்சாலைகளிலெல்லாம் கைதி

கள் நிறைந்தனர். மேற்கொண்டு சத்தியாக்கிரகிகள் கைது செய்யப்பெற்றுச் சிறைச்சாலைக்கு வந்தால் அவர்களுக்கு இடமில்லாதுபோயிற்று. என்ன செய்வது, இச் சாத்துவிக வீரர்களுடன் எப்படிப் போரிடுவது என்று அரசாங்கத்திற்கு ஒன்றுமே விளங்கவில்லை.''

''நீங்களும் சத்தியாக்கிரகம் செய்தீர்களா?'' என வினவினன் சேகர்.

''ஆம்.''

''உங்களையும் போலீஸார் அடித்தனரா?'' எனக் கேட்டாள் லீலா.

''ஆம். எனக்குத் தலையில் பலமான அடி; காயம் ஆறுவதற்கு ஆறு மாதம் ஆயிற்று,'' என்றார் கேசவன்.

''உங்களையும் சிறைக்கு அனுப்பினார்களா?''

''ஆம். எனக்கு இரண்டாண்டுகள் சிறைத் தண்டனை அளிக்கப்பட்டது. என்னைப் போன்ற அரசியல் கைதிகள் பலருடன் நானும் சிறைவாசத்தின் கடுமைகளை அனுபவித்தேன்.''

''தடியடி, சிறைவாசம் இவற்றைக் கண்டு நீங்கள் அஞ்சவில்லையா?'' என்றாள் லீலா.

''இல்லை. உண்மையில் அப்போது நாடெங்கிலும் ஒருவகைப் புதிய மனவுறுதியும் நெஞ்சுத் துணிவும் வீர உணர்ச்சியும் பொங்கிப் பரவியிருந்தன. தலைவரின் ஆணையை நிறைவேற்றவும் நாட்டிற்காகப் போராடி உயிரைத் துறக்கவும் மக்கள் துணிந்திருந்தனர்.''

''ஆகா! எப்பேர்ப்பட்ட அற்புதமான நிலைமை! அந்நிலைமையைச் சர்க்கார் எங்ஙனம் சமாளித்தது?'' என்றான் சேகர்.

''என்ன செய்வதென்று அரசாங்கத்திற்கு ஒன்றுமே விளங்கவில்லை. உடன்பாட்டிற்கு வர இணங்குவதாகவும்



வட்டமேஜை மகாநாட்டில் காந்திஜி

போராட்டத்தை நிறுத்திவிடும்படியாகவும் காந்திஜியிடம் அரசாங்கம் வேண்டிக்கொண்டது.''

''சுயராஜ்யம் வழங்குவதற்கு அது இசைந்ததா?''

''அவ்வளவு எளிதாகவா? மக்களின் கோரிக்கைகளை எடுத்துச் சொல்வதற்காகக் காந்திஜி லண்டன் சென்றார். ஆயினும், இந்தியருக்கு முழுப் பொறுப்புள்ள ஆட்சியை அளிப்பதற்குப் பிரிட்டிஷ் சர்க்கார் இசையவில்லை. 1935-இல் புதிய அரசியலமைப்பு ஒன்றை அது வகுத்தது. ஆனால், காங்கிரஸ் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. இவ்வமைப்பின்படி, சட்டமன்றங்கள் விஸ்தரிக்கப்பட்டன. 'ஓட்' அளிக்கும் உரிமை மிகுதியானபேர்களுக்கு வழங்கப்பட்டது. ஆனால், அரசாங்கம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற சட்டமன்றத்தின் அங்கத்தினர்களுக்கு முழுதும் பொறுப்புள்ளதாகச் செய்யப்படவில்லை. இவ்வரசியலமைப்பில் வேறுபல குறைபாடுகளும் இருந்தன. இந்தியர்களிடம் அதிகாரத்தை அளிப்பதற்குப் பிரிட்டிஷார் ஒருபோதும் இணங்கமாட்டார்கள்போலவே தோன்றியது. எனவே, போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவது எனக் காங்கிரஸ் தீர்மானித்தது. 1940-இலும் 1942-இலும் காந்திஜி மேலும் இரு போராட்டங்களை நிகழ்த்தினார். 1942-இல் இந்தியாவிற்கு உடனடியான, முழுச் சுதந்திரம் வழங்கப்பெறவேண்டும் என்று அவர் அறிவித்தார். இதை ஆதரித்து நாடெங்கிலும் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது. இந்தியாவை இனிமேல் தனது ஆதிக்கத்தின்கீழ் வைத்துக்கொள்ளமுடியாது என்பதை அப்போதுதான் பிரிட்டிஷ் அரசாங்கம் உணர்ந்துகொண்டது. இந்தியாவிற்கு முழுச் சுதந்திரம் வழங்க அது இசைந்தது. 1947 ஆகஸ்ட் 15 அன்று இந்தியா முழு விடுதலை பெற்றுச் சுதந்திர நாடாயிற்று.''

# இந்தியக் குடியரசு

## ஜனவரி 26, 1950

இந்தியாவின் மக்களாகிய நாம் இந்தியாவை ஒரு சம்பூரண அதிகார ஜனநாயகக் குடியரசாக அமைத்து, அதன் குடிகள் அனைவருக்கும்— சமூகம், பொருளாதாரம், அரசியல் இவற்றில்

**நீதியும்,**

சிந்தனை, பேச்சு, நம்பிக்கை, மதம், வழிபாடு இவற்றில்

**சுதந்திரமும்,**

அந்தஸ்து, வாய்ப்பு இவற்றில்

**சமத்துவமும்** கிடைக்குமாறு செய்யவும்

தனியொருவரின் கண்ணியமும் தேச சமுதாயத்தின் ஒருமைப்பாடும் நிலைபெறும் வண்ணம் அவர்களனைவரிடமும்

**சகோதரத்துவம்** ஓங்குமாறு செய்யவும்

முழுமனதுடன் தீர்மானித்துக் கொண்டமையால்

நமது அரசியல் நிர்ணய சபையில் இதனால் இந்த அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டு, சட்டமாக இயற்றி, நமக்கே வழங்கிக்கொள்கிறோம்.

"அப்போதுதான் நமது பார்லிமெண்ட்டும் தோன்றியதா ?" என வினவினன் சேகர்.

"ஆம். நம் தலைவர்கள் புதிய அரசியலமைப்பொன்றை வகுத்தனர். அதன்படி, இந்தியா ஒரு சம்பூரண அதிகார ஜனநாயகக் குடியரசாக ஆயிற்று. நமது நாட்டிலிருக்கும் வயது வந்தோர் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்பெறும் பார்லிமெண்ட் ஒன்றிருக்குமென்றும் அது மக்கட்சபை, ராஜ்யசபை என்று இரு சபைகள் கொண்டதாக இருக்குமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

இவையே லோக சபை, ராஜ்ய சபை என வழங்குகின்றன. மக்களின் முழு அரசுரிமையும் பார்லிமெண்ட்டினிடம் ஒப்படைக்கப்பெற்றது. புதிய அரசியலமைப்பின் கீழ், முதற் பொதுத் தேர்தல்கள் 1950-51-ஆம் ஆண்டில் நடந்தன. முழு அதிகாரமும் வாய்ந்த முதலாவது பார்லிமெண்ட் 1952-இல் கூடியது. இதிலிருந்து, பார்லிமெண்ட்டின் வளர்ச்சி நாட்டின் சுதந்திரப் போராட்டத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டது என்பதும் சுதந்திரம் அடைந்த பின்னரே அது முழு வளர்ச்சிபெற்றது என்பதும் விளங்குகின்றன அல்லவா ?"

"ஆம். நம் பார்லிமெண்ட்டின் கதை விறுவிறுப்பும் கவர்ச்சியும் நிறைந்த, சுவையுள்ள ஒரு கதைபோலத்தான் இருக்கின்றது !" என்றான் சேகர்.

## வினாக்கள்

1. பண்டைக் காலத்தில் இந்தியாவில் ஜனநாயக முறை அரசாங்கம் இருந்தது என்பதைத் தெரிவிக்கும் சில நூல்களைக் கூறுக.
2. பண்டைக் காலத்துச் சபைகள் சிலவற்றின் பெயர்களை எழுது.

3. சுயராஜ்யம் என்றால் என்ன ?

4. எந்தக் கருவியைக்கொண்டு காந்திஜி பிரிட்டிஷாருடன் போரிட்டார் ?

5. எப்போது இக்கருவி மிக்க ஆற்றல் வாய்ந்ததாக இருக்கமுடியும் ?

6. சுதந்திரப் போராட்டம் நமது பார்லிமெண்ட்டின் வளர்ச்சியுடன் எங்ஙனம் தொடர்புடையது ?

7. இன்றையப் பார்லிமெண்ட்டின் அங்கத்தினர்களுக்கும் பிரிட்டிஷாரின் காலத்திலிருந்த அங்கத்தினர்களுக்கும் என்ன வித்தியாசம் ?

## 6. பார்லிமெண்ட் மாளிகை

பார்லிமெண்ட் கூட்டம் தொடங்குவதற்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே கேசவனும் அவரது குடும்பத்தினரும் டில்லிக்கு வந்துவிட்டனர்.

பார்லிமெண்ட் சபை கூடுவதற்கு முந்தைய நாளன்று பார்லிமெண்ட் மாளிகையைக் காண்பிப்பதற்காகக் கேசவன் தமது மனைவியையும் குழந்தைகளையும் அழைத்துச் சென்றார்.

முன்வாயிலை அடைந்ததும் "ஆகா! எத்தனை அழகான பெரிய மாளிகை!" என்று வியந்து கூறினான் சேகர்.

"தொலைவிலிருந்து பார்க்கும்போது இதன் தோற்றம் மிக்க நேர்த்தியாகவும் கம்பீரமாகவும் இருக்கின்றது!" என்று மொழிந்தாள் நிர்மலா.

"மேலும், எவ்வளவு கணக்காக, வட்டவடிவத்தில் அமைந்திருக்கிறது இக்கட்டிடம்!" என ஆச்சரியத்துடன் புகன்றாள் லீலா.

"இவ்வட்டம் எத்தனை பெரியது தெரியுமா?" என்று கேட்டார் கேசவன்.

"சுற்றிலும் அரை மைலாவது இருக்கும்," என்றான் சேகர்.

"ஆம். இதன் சுற்றளவு ஏறக்குறைய அரை மைல். திட்டமாகச் சொல்ல வேண்டுமெனில் சுற்றளவு ஆயிரத்து எழுநூற்று அறுபது அடி; குறுக்களவு ஐந்நூற்று அறுபது அடி."

"எங்கள் பள்ளிக்கூடத்தின் வருடாந்திர விளையாட்டுக்களை இங்கே வைத்துக்கொண்டால் கட்டிடத்தைச்

சுற்றிலுமுள்ள இடத்தில் ஓட்டப் பந்தயங்களை நடத்தலாம்," என்று சொன்னான் சேகர்.

கட்டிடத்தைச் சுற்றிலும் வேலி போட்டு அடைத்திருந்த திறந்த வெளிகளைக் கண்ணுற்ற நிர்மலா "கால் பந்து, ஹாக்கி போன்ற ஆட்டங்களை நடத்துவதற்கு இத் திறந்த வெளிகள் மிகவும் ஏற்றனவாயிருக்கும்," என்றாள்.

"இந்த இடம் முழுவதும் கிட்டத்தட்ட ஆறு ஏக்கர் பரப்பளவுடையது," எனத் தெரிவித்தார் கேசவன்.

"இந்த கட்டிடத்திற்குப் 'ப்ளான்' அல்லது திட்டம் வரைந்தது யார்?" என வினவினாள் நிர்மலா.

"ஸர் எட்வின் லுட்யென்ஸ், ஸர் ஹெர்பர்ட் பேக்கர் என்னும் இரு கட்டிடக்கலை நிபுணர்கள். புது டில்லி, அரசாங்க அலுவலகக் கட்டிடங்களின் இரு பகுதிகள், ராஷ்ட்ரபதி பவனம் ஆகிய கட்டிடங்கள் யாவற்றிற்கும் திட்டம் வரைந்ததும் அவர்களே," எனப் பதிலளித்தார் கேசவன்.

"இதை அழகாகத் திட்டமிட்டதற்காகவும் இக்கட்டிடத்தை வட்டவடிவமாக அமைத்ததற்காகவும் நாம் அவர்களை மிகவும் பாராட்டவேண்டும்."

"ஏன் அவ்வாறு கூறுகின்றாய்?" எனக் கேட்டார் கேசவன்.

"பார்லிமெண்ட் என்பது மக்களின் முழு அதிகாரத்தையும் சம உரிமைகளையும் குறிப்பதல்லவா? சாசுவதம், சமத்துவம்—இவற்றைக் குறிப்பதற்குப் பொருத்தமான சின்னம் வட்டமே அல்லவா? மேலும், நம்மைப் பொறுத்த வரையில் வட்டத்திற்கு மற்றொரு சிறப்பும் உண்டு. நாட்டின் கொடியிலும் தேசீயச் சின்னத்திலும் சக்கரத்தின் வடிவத்தில் அதை நாம் ஏற்றுக்கொண்டு அமைத்திருக்கின்றோம். எனவே, நமது பார்லிமெண்ட் மாளிகையும்

வட்டவடிவமாக அமைந்திருத்தல் மிக்கப் பொருத்த மானதே யாகும்!''

''உனது கற்பனைத்திறன் உண்மையிலேயே மிகவும் அற்புதமானதுதான்!'' எனப் பாதிப் புகழ்ச்சியும் பாதிக் கேலியுமாகக் கூறினர் கேசவன். அதைக் கேட்ட நிர்மலா தன்னிடம் தோன்றிய நாணத்தை மறைத்தவாறே ''இது எப்போது கட்டப்பெற்றது?'' என வினவினுள்.

''இதன் கட்டிட வேலை 1921-இல் தொடங்கப் பெற்றது. முழுக் கட்டிடத்தையும் முடிப்பதற்கு ஆறு ஆண்டுகள் ஆயின. 1927 ஜனவரி 18 அன்று இது திறக்கப் பெற்றது.''

''இதைக் கட்டுவதற்கு ஏராளமான பணம் செலவழிந் திருக்குமே?'' என்ருன் சேகர்.

''ஆம். எண்பத்து மூன்று இலட்சம் ரூபாய் செல வாயிற்ரும்; அதுவும் சாமான்கள் யாவும் மலிவாக விற்ற காலத்தில். இம்மாதிரிக் கட்டிடம் இப்போது கட்டவேண்டு மென்ருல் நான்கு கோடி ரூபாய்க்குமேல் வேண்டி யிருக்கும்.''

''இக்கட்டிடம் கட்டப்பெறுவதற்கு முன்னர், பார்லி மெண்ட் கூட்டம் எங்கே நடைபெற்றுவந்தது?''

''1911-ஆம் ஆண்டில் இந்தியாவின் தலைநகரமானது கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றப்பட்டதல்லவா? இக்கட்டிடங்கள் முடிவடையும்வரை அரசாங்கமும் சட்ட மன்றமும் பழைய டில்லியிலுள்ள பழைய சர்க்கார்க் காரி யாலயக்கட்டிடங்களில் இருந்துவந்தன. சட்டமன்றத் திற்கு அப்போது பார்லிமெண்ட் என்ற பெயர் கிடையாது; சட்டப் பரிஷத் அல்லது சட்டக் கவுன்சில் என்ற பெயர் தான். மேலும், இப்போதிருப்பதுபோல் அப்போது இரண்டு சபைகள் இருக்கவில்லை. ஒரே ஒரு சபைதான் இருந்தது.''



*நாட்டின் கொடி*

"இப்போது கட்டிடத்திற்குள்ளே போகலாமே!" என்ருன் சேகர்.

கிழக்கு நோக்கியிருந்த பிரதான வாயிலுக்கு (வாயில் 1) அவர்கள் சென்றனர். உள்ளே நுழையுமுன் வாயிலுக்குமேலே எழுதப்பெற்றிருந்த சொற்களைக் கவனித்த லீலா "அங்கே என்ன எழுதப்பட்டிருக்கிறது?" எனக் கேட்டாள்.

"அது சம்ஸ்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ளது. தங்களுடைய சம்பூர்ண அதிகார ஆட்சிமன்றம் எங்ஙனம் அலுவல் புரிகின்றது என்பதை உள்ளே வந்து காண விரும்புவோருக்கு இக்கட்டிடத்தின் வாயில் எப்போதும் திறந்திருக்கும் என்பதே அதன் பொருள்."

கட்டிடத்தின் கீழ்ப்பகுதியிலுள்ள நடைபாதை வழியாக அவர்கள் சென்றுகொண்டிருந்தனர். அப்போது நிர்மலா "இச்சுவர்களின்மீது நம் நாட்டின் வரலாற்றையும் நம் தலைவர்கள், புகழ்பெற்ற பெரியோர்கள் ஆகி

யோரின் வாழ்வில் நிகழ்ந்த முக்கியமான சம்பவங்களையும் எடுத்துக்காட்டும் அழகிய காட்சிகளை ஓவியங்களாகத் தீட்டினால் மிகவும் நன்றாக இருக்கும், இல்லையா ?'' என்றாள்.

'' அருமையான யோசனை ! உண்மையில், அம்மாதிரி ஓவியங்களைத் தீட்டவேண்டுமென ஏற்கனவேயே முடிவு செய்தாகிவிட்டது. கூடிய விரைவில் சித்திரங்கள் தயாராகிவிடும்,'' எனத் தமது மனைவியின் யோசனையை ஆமோதித்தார் கேசவன்.

'' இவ்வறைகள் எதற்காக இருக்கின்றன ?'' என வினவினாள் லீலா.

'' மந்திரிகளுக்கும் பார்லிமெண்டின் முக்கியமான அதிகாரிகளுக்கும் இவை அலுவலக அறைகளாகப் பயன் படுகின்றன. ஒவ்வொரு கட்சியின் உறுப்பினர்களும் கூடிப் பொது விஷயங்களை விவாதிக்கவும் தனித்தனி யறைகள் உள்ளன.''

'' மந்திரிகளுக்கு இங்கே எதற்காக அலுவலகம் இருக்கவேண்டும் ?'' எனக் கேட்டான் சேகர்.

'' பார்லிமெண்ட் நடைபெறும்போது அவர்கள் பெரும் பாலும் இங்கேயேதான் இருக்கவேண்டியிருக்கும். அங்கத்தினர்களின் கேள்விகளுக்கு விடையளிப்பது, மசோதாக்களைக் கொண்டுவருவது, சபையில் பிரசங்கம் செய்வது போன்ற எத்தனையோ அலுவல்களை அவர்கள் செய்யவேண்டும். மேலும், அவர்கள் எந்த நேரத்திலும் சபைக்கு வந்து சில விஷயங்களுக்கு விளக்கம் தரவேண் டியதாயிருக்கும். சர்க்கார்க் காரியாலயத்திலிருந்து அடிக்கடி அவர்களால் வந்து போய்க்கொண்டிருக்க முடியாது. எனவே, பார்லிமெண்ட் நடக்கும்போது அதன் சம்பந்தமான அலுவல்களைச் சிரமமின்றிக் கவனித்துக்

கொள்வதற்காக அவர்களுக்குத் தனித்தனியறைகள் கொடுக்கப்பட்டுள்ளன.''

சுவரின்மீது ஓரிடத்தில் 'விசாரணை அலுவலகம்' என்னும் பலகையைப் பார்த்த லீலா " அடே! இங்கே ஒரு விசாரணை அலுவலகமும் இருக்கின்றது " என்றாள்.

" பார்லிமெண்ட் சபைகள் நடைபெறும்போது அவற்றின் நடவடிக்கைகளைப் பார்ப்பதற்குச் சிலர் வருவார்கள். அல்லது, அங்கத்தினர்களையோ பார்லி மெண்ட் அதிகாரிகளையோ சந்திப்பதற்காகவும் சிலர் வரலாம். அம்மாதிரி வருவோருக்கு உதவி செய்வதற் காகத்தான் இவ்விசாரணை அலுவலகம் இருக்கின்றது. உள்ளே சென்று பாாப்பதற்குத் தேவையான அனுமதிச் சீட்டுகள் இங்கே கிடைக்கும்.''

எதிரிலிருந்த தபாற்பெட்டியைக் கவனித்த சேகர் "இங்கே ஒரு தபால்-தந்தி அலுவலகங்கூட இருக் கின்றதே!'' என்றான்.

" அங்கத்தினர்கள், இங்கு அலுவல் புரிவோர் ஆகி யோரின் வசதிக்காகவே இது உள்ளது. இதைத் தவிர, இந்திய ஸ்டேட் பாங்கின் ஒரு சிறிய ஆபீஸ், டெலிபோன் ஆபீஸ், ரயில்வே டிக்கட் ஆபீஸ், போசனசாலை, சிற்றுண்டி சாலை ஆகியனவும் இருக்கின்றன.''

"விளையாட்டுச் சங்கம் ஒன்று இருந்தால் பட்டியல் நிறைவாகிவிடும்!'' என்றுப் புன்சிரிப்புடன் புகன்றாள் நிர்மலா.

"ஓ, அதுவும் இருக்கின்றது. பார்லிமெண்ட் உத்தி யோகஸ்தர்களுக்கு 'பொழுதுபோக்கு சங்கம்' ஒன்றும் உள்ளது. கட்டிடத்திற்குள்ளேயே ஆடக்கூடிய காரெம், டேபிள்-டென்னிஸ், சதுரங்கம் போன்றவற்றிற்கும் திறந்த வெளி விளையாட்டுக்களுக்கும் வசதிகள் உள்ளன.

உல்லாசப் பிரயாணங்கள், விருந்துகள், சமூக வைபவங்கள், நாடகங்கள் முதலியவற்றிற்கும் அது ஏற்பாடு செய்கின்றது."

லோகசபை ராஜ்யசபைக் கட்டிடங்களுக் கிடையிலுள்ள தோட்டத்தின் வழியாக அவர்கள் நடு மண்டபத்திற்குச் சென்றனர். இரு மருங்கிலும் பூச்செடிகள் நிறைந்த அழகான புல் தரைகளையும் மையத்தில் நீரை உயரப் பீச்சும் குழாய்களுள்ள நீண்ட செய்குளத்தையும் லீலா பார்த்து, "இம்மாளிகைக்குள்ளே எத்தனை எழில் வாய்ந்த தோட்டம் இருக்கிறது!" என்று மகிழ்ச்சியுடன் மொழிந்தாள்.

"ரம்மியமான இந்த நிறங்களும் மகிழ்ச்சியளிக்கும் இக்குளுமையும் எவ்வளவு இன்பமாயிருக்கின்றன!" என்று போற்றினாள் நிர்மலா.

"மறுபக்கத்தில் இதைப் போன்ற தோட்டங்கள் இன்னும் இரண்டு இருக்கின்றன. நமக்கு இருபுறமும் இருக்கும் அரைவட்ட வடிவமான கட்டிடங்களைப் பார்த்தீர்களா? நமக்கு வலதுபுறமுள்ளது லோகசபை; இடது புறமிருப்பது ராஜ்யசபை. இதேமாதிரிக் கட்டிடம் ஒன்று எதிர்ப்பக்கத்திலும் உள்ளது. முன்பு அது 'அரசர்கள் சபை'யாகப் பயன்படுத்தப்பட்டுவந்தது. இப்போது அக் கட்டிடத்தில்தான் உச்ச நீதிமன்றம் இருக்கிறது. இக் கட்டிடங்களுக்கு நடுவிலுள்ள இடை வெளியெல்லாம் தோட்டந்தான்."

"மாலை வேளைகளில் தோட்ட விருந்துகள், சமூக வைபவங்கள் ஆகியவை வைத்துக்கொள்வதற்கு ஏற்ற இடம்."

"ஆம். அத்தகைய வைபவங்களுக்காகத்தான் அது பயன்படுத்தப்படுகின்றது."

நடு மண்டபத்தினுள் நுழைந்து 'லாபி' எனப்படும் இடைவாயிலைத்தாண்டி வட்டவடிவமான விமானத்தின் கீழ் வந்தனர் கேசவன் குடும்பத்தினர்.

"இம்மண்டபமும் கம்பீரமான தோற்றத்துடன் கூடியதாகவே இருக்கின்றது," என மொழிந்தாள் நிர்மலா.

"இம்மண்டபமும் வட்டவடிவமாகத்தான் இருக்கின்றது; வட்டவடிவமான கட்டிடத்திற்குள் வட்டவடிவமான ஒரு மண்டபம்!" என்றுன் சேகர்.

மேலே அண்ணுந்து பார்த்த லீலா "அடேயப்பா, எவ்வளவு பெரிய வட்டவடிவமான விமானம்!" என்று வியப்பு மிகுந்து கூறிஞள்.

"இதன் குறுக்களவு நூறு அடி; தரையிலிருந்து இதன் உயரம் எழுபது அடி," என்ருர் கேசவன்.



நடுமண்டபம், பார்லிமெண்ட் மாளிகை

"அவ்வாறிருந்தும் சிறிதுகூட எதிரொலியே இல்லையே!" என்று ஆச்சரியப் பட்டாள் நிர்மலா.

"பேசுபவரின் குரல் எதிரொலிக்காமலிருக்கும் பொருட்டுச் சத்தத்தை உறிஞ்சிக் கொள்ளுந் தன்மை யுடைய ஓடுகளைக் கூரையில் அமைத்திருக்கின்றனர்."

"மேற்கூரையிலிருந்து அழகான கொத்து விளக்கு ஒன்றைத் தொங்கவிட்டிருந்தால் இம்மண்டபம் இன்னும் மிகுந்த பொலிவுடன் விளங்கும்," என்று சொன்னாள் லீலா.

உட்புறமாக மண்டபத்தை யொட்டியிருந்த மேல் மாடங்களைக் கருஞ் சலவைக் கல்லாலான தூண்கள் தாங்கிக்கொண்டு நின்றன. அவற்றில் ஒன்றினருகிற் சென்ற சேகர் "ஆகா! எவ்வளவு நேர்த்தியான தூண்!" எனப் புகழ்ந்தான்.

"அவை எத்தனை மழமழப்பாகவும் பளபளப்பாகவு முள்ளன!" என்றாள் லீலா.

"இத்தூண்கள் செய்வதற்குத் தேவையான சலவைக் கல் கயாவிலிருந்து கொண்டுவரப்பட்டது. இம்மண்டபத் தில் மொத்தம் இருபத்திரெண்டு தூண்கள் உள்ளன. நான்கு நான்கு தூண்களாக இருபது தூண்கள் மேல்மாடங் களிலுள்ள அடுக்காசனங்களையும் மேடைக்கு மேலேயுள்ள பகுதியை மீதி இரண்டு தூண்களும் தாங்கிக்கொண்டிருக் கின்றன."

முதலாவது மாடியில் மண்டபத்தைச் சுற்றிலும் ஆறு வரிசை ஆசனங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. அவற் றைக் கவனித்த லீலா "இம் மேல் மாடங்களும் அவற்றில் படிப்படியாக அமைக்கப்பெற்றுள்ள அடுக்காசனங்களும் எதற்காக இருக்கின்றன?" என வினவினாள்.

"கீழே சபையில் நடக்கும் நடவடிக்கைகளைப் பார்க்க

வருவோர் உட்கார்ந்துகெள்வதற்காத்தான்!" எனப் பதி லளித்தார் கேசவன்.

மேடையின் விளிம்புகளிலும் ஓரங்களிலும் வெண் சலவைக் கல்லால் அழகான நகாசு வேலை மிக்க நேர்த்தி யுடன் செய்யப்பெற்றிருந்ததைக் கண்ட சேகர் "இச் சலவைக்கல் எங்கிருந்து கொண்டுவரப்பெற்றது?" எனக் கேட்டான்.

"ராஜஸ்தானிலுள்ள மக்ராணு என்னுமிடத்திலிருந்து கொண்டுவரப்பெற்றது."

"இக்கட்டிடத்தில் தென்னிந்தியாவிலிருந்து வந்த பொருள் எதுவும் பயன்படுத்தப்பெறவில்லையா?"

"ஓ, தென்னிந்தியாவிலிருந்து வந்த சில பொருள் களும் இக்கட்டிடத்தின் சிறப்பிற்கு உதவியுள்ளன. கதவுக ளிலும் சுவரை மூடியிருக்கும் பலகைகளிலும் பயன்படுத்தப் பட்டுள்ள கருங்காலி மரம் தென்னிந்தியாவிலிருந்து வந்ததே. இதிலிருக்கும் தேக்கு மரம் அஸ்ஸாமிலிருந்து கொண்டுவரப்பட்டது. சிவப்பு, வெள்ளைச் சந்தனக் கற்கள் போன்ற வேறு சில பொருள்கள் அருகிலிருக்குமிடங்களி லிருந்தே கிடைத்தவை. இங்ஙனம், நாட்டின் வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு முதலிய எல்லாப் பகுதிகளிலிருந் தும் கிடைத்த பொருள்கள் இக்கட்டிடத்தின் எழிலுக்கும் மேன்மைக்கும் உதவியிருக்கின்றன."

மேடைக்குமேலே ராஷ்ட்ரபதியின் பீடத்திற்குப் பின்னுல் தொங்கவிடப்பட்டிருந்த படத்தைப் பார்த்த லீலா "இதோ மகாத்மா காந்தியின் படம்!" என்று மகிழ்ச்சியுடன் கூறினுள்.

"அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினராக இருந்த திரு. ஏ. பி. பட்டாணி என்பவரால் இது நாட்டிற்கு நன் கொடையாக அளிக்கப்பட்டது. அவருடைய தந்தை

யார், பார்லிமெண்ட்டில் வைப்பதற்கென்றே இதை லண்டனில் வாங்கினராம்; பிரபல பிரிட்டிஷ் ஓவியர் ஸர் ஆஸ்வால்ட் பயர்லி என்பவர் தீட்டியது.''



தாதாபாய் நவுரோஜி

இடதுபுறமிருந்த ஒரு படத்தைப் பார்த்துவிட்டு ''இது யாருடைய படம்?'' எனச் சேகர் கேட்டான்.

''நம் நாட்டின் மற்ருெரு பிரசித்திவாய்ந்த தேசபக்தர் தாதாபாய் நவுரோஜி என்பவருடையது. பம்பாயில் வசிக்கும் பார்ஸிமக்கள் இதைப்பார்லிமெண்ட்டிற்கு அளித்தனர்; தாதாபாய் நவுரோஜியும் ஒரு பார்ஸியே.''



லோகமான்ய திலகர்

லோகமான்ய திலகரின் படத்தை உற்று நோக்கிய லீலா ''இது யாருடைய படம், அப்பா? இவரிடம் தென்படும் கம்பீரமான தோற்றமும் அழுத்தமான அங்கவமைப்புக்களும், திட நெஞ்சமும் உறுதியான தீர்மானமும் செய்கையில் நாட்டமுமுள்ளவர் என்பதைத் தெரியப்

படுத்துகின்றன. இம்மகாபுருஷர் யார்?'' என வின விஞள்.

''உண்மைதான். மகாராஷ்டிரத்தின் ஏறுபோல் விளங்கிய லோகமான்ய திலகர் இவரே. நமது அரசியல் போராட்டத்தில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திஞர். 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை; அதை அடைந்தேதீரு வேன்' என்று வீரமுழக்கம் செய்தவரும் இவரே!'' என விடை பகர்ந்தார் கேசவன்.

''பிற தலேவர்களின் படங்களேயும் இங்கே வைக்க வேண்டும். அப்போது மண்டபத்தின் அழகு இன்னும் அதிகரிக்கும்,'' என்ருள் நிர்மலா.

''ஆம் அப்படித்தான் செய்யப்போகின்ருேம். சலவைக் கற்தூண்களுக்கிடையே பன்னிரண்டு பலகைகள் தென்படுகின்றனவே அவைகள் அதற்காகவே பொருத்தப் பட்டவை. மற்ற தலேவர்களின் படங்கள் கிடைத்த வுடன் அவை அவற்றின்மீது அமைக்கப்படும்.''

இடைவாயிலின் சுவர்களில் புத்தக அலமாரிகள் இருப்பதைக் கவனித்த சேகர் ''சுற்றிலும் சுவர்களில் ஏன் புத்தக அலமாரிகளே அமைத்திருக்கின்றனர்?'' எனக் கேட்டான்.

''அங்கத்தினர்களின் உபயோகத்திற்காக நூல் நிலேயம், படிப்பகம் ஆகியவற்றை வைப்பதற்கென்றே முதலில் இம்மண்டபம் கட்டப்பெற்றது. பிறகு, 1946-இல் அரசியல் நிர்ணய சபை கூடியபோது இது மாற்றி யமைக்கப்பெற்றது. அங்கத்தினர்கள் அமர்ந்துகொள்ள வும் மேல்மாடங்களிலும் ஆசனங்கள் போடப்பட்டன. சுதந்திர இந்தியாவின் இன்றைய ஜனநாயக அரசிய லமைப்பு இங்குதான் தயாரிக்கப்பெற்றது. 1947 ஆகஸ்ட் 14-ஆம் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு நம் நாடு

சுதந்திர நாடு என அறிவிக்கப்பெற்றதும் இதே மண்டபத்தில்தான்."

" அப்படியென்ருல் மாபெரும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த மண்டபத்தில் நின்றுகொண்டிருக்கின்ருேம் என்று சொல்லுங்கள்! இதைக் கண்டதில் எனக்கு அளவிலா மகிழ்ச்சி; ஒருநாளும் இதை மறக்கமாட்டேன்," என்ருள் நிர்மலா.

" இப்போதும் பார்லிமெண்ட் கூட்டங்கள் இங்கேதான் நடைபெறுகின்றனவா ?" எனக் கேட்டான் சேகர்.

" பார்லிமெண்ட்டின் இரு சபைகளும் தனித்தனியாகக் கூடும் இடங்கள் வேறு. ஆனல், இரு சபைகளும் ஒன்ருகக் கூடும்போதும் முக்கியமான தேசீய மகாநாடுகளும் சர்வதேசக் கூட்டங்களும் நடைபெறும்போதும் இம் மண்டபமே பயன்படுத்தப்படுகின்றது. அதனுல்தான், அரசியல் நிர்ணய சபை கலேக்கப்பட்ட பிறகுகூட ஆசன வசதிகள் எல்லாம் கலேக்கப்பெருது அங்ஙனமே வைக்கப் பட்டுள்ளன."

" இடைவாயிலில் இருக்கும் இவ்வறைகள் எதற்காக இருக்கின்றன ?" என வினவினுள் நிர்மலா.

" அங்கத்தினர்கள் ஓய்வெடுத்துக்கொள்வதற்காக. அங்கே அவர்கள் இளேப்பாறவோ, படிக்கவோ, எழுதவோ வசதியாக இருக்கும். ஸ்திரீ அங்கத்தினர்களுக்கெனப் பிரத்தியேகமாக ஓர் அறை ஒதுக்கப்பெற்றுள்ளது. தேவைப்படும்போது அங்கத்தினர்களுக்கு உடனே கிடைக்கவேண்டும் என்பதற்காக நூல் நிலேயத்தின் ஒரு பகுதி இடைவாயிலிலேயே அமைக்கப்பெற்றுள்ளது. நூல் நிலேயத்திற்கு வரும் பத்திரிகைகளும் செய்தித்தாள்களும் இங்கே மேஜைமீது வைக்கப்படுகின்றன; விரும்பும்போது அங்கத்தினர்கள் அவற்றைப் படிக்கலாம்."

மண்டபத்தைவிட்டு அவர்கள் வந்தபோது பகல் ஒருமணி ஆகிவிட்டது. முதலாவது மாடியிலிருந்த போசனசாலைக்கு அவர்களை அழைத்துச் சென்றார் கேசவன். சாப்பாடு முடிந்தவுடன் அவர்கள் பார்லிமெண்ட் கட்டிடத்தின் வேறு பகுதிகளைக் காணக் கிளம்பினர்.

வெளி வராந்தாவிற்கு வந்ததும் '' எத்தனை உயரமான, பெருந் தூண்கள்! வெளியிலிருந்து பார்க்கும்போது அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை,'' என்றான் சேகர்.

'' ஒவ்வொரு தூணும் இருபத்தேழு அடி உயர முள்ளது. இம்மாதிரி மொத்தம் நூற்று நாற்பத்து நான்கு தூண்கள் உள்ளன. கட்டிடத்தைச் சுற்றிலும் இருக்கும் இத்தூண்கள் அதற்கு வசீகரமானதொரு தோற்றத்தை யளிக்கின்றன.''

கேசவனும் அவரது குடும்பத்தினரும், ஆயிரக்கணக் கான புத்தகங்கள் அழகாக அடுக்கிவைக்கப்பெற்றிருந்த அலமாரிகள் வரிசை வரிசையாக நின்றுகொண்டிருந்த அறைகளுக்கு வந்தனர்.

'' இதுதான் பிரதான நூல்நிலையம்,'' என்றார் கேசவன்.

'' சிறிதுகூடச் சத்தமேயில்லையே!'' என்று வியப்புடன் கூறினாள் நிர்மலா.

'' நிம்மதியாகவும் அமைதியுடனும் தொந்தரவு எதுவு மின்றி அங்கத்தினர்கள் படிப்பதற்கு வசதியாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இவ்வறைகள் இருக்கின்றன,'' என்று சொன்னார் கேசவன்.

'' இம்மாதிரியான அறையில்தான் நான் என் பாடங் களைப் படிக்க விரும்புகிறேன்,'' என்றான் சேகர்.

'' சரிதான். தினந்தோறும் ஒழுங்காகப் படிக்காம லிருப்பதற்கு உனக்கு நல்ல சாக்கு இப்போது கிடைத்து விட்டது,'' என்று விளையாட்டாகக் கூறினாள் நிர்மலா.

"படிக்காமல் நன்ருகத் தூங்குவதற்காகத்தான் இம் மாதிரி அறை வேண்டுமென்கிருன்," எனக் கிண்டலாகச் சொன்ருள் லீலா.

சேகருக்கு இக்கேலிப்பேச்சு பிடிக்கவில்லை என்பதை அவன் முகத்தோற்றமே தெரிவித்தது. அதைக் கவனித்த கேசவன் "அவர்கள் சொல்வதைக் குறித்துக் கவலைப் படாதே! அங்கத்தினர்கள்கூடப் பார்லிமெண்ட்டில் அவ் வப்போது தூங்குவது உண்டு," என்று சிரித்துக்கொண்டே மொழிந்தார்.

அடுத்தபடியாக, அவர்கள் முதல் மாடியிலுள்ள 53, 62, 63 இலக்கமிட்ட அறைகளைப் பார்வையிட்டனர். 63 இலக்கமிட்ட 'கமிட்டி' அறையில் இருந்தபோது, கேசவன் "இங்கேதான் சபாநாயகர்களின் கூட்டம், பல்வேறு அரசியல் கட்சிகளின் கூட்டங்கள், பிரதம மந்திரியின் பத்திரிகைக் கூட்டம் ஆகியவை நடைபெறும். 1942-இல் கிரிப்ஸ் தூதுகோஷ்டியினர் வந்திருந்தபோதுகூட இங்கே தான் பேச்சுவார்த்தைகள் நடந்தன" என அவர்களிடம் கூறிஞர்.

"இவற்றிற்குக் 'கமிட்டி' அறைகள் என்று ஏன் பெயர்?" எனக் கேட்டான் சேகர்.

"இப்போதெல்லாம் பார்லிமெண்ட்டின் வேலை மிகவும் அதிகமாகிவிட்டது. முழுச் சபையும் எல்லா விஷயங் களையும் நுணுக்கமாய்ப் பரிசீலனை செய்ய முடிவதில்லை. எனவே, சில சில அங்கத்தினர்கள்கொண்ட 'கமிட்டி'கள் பலவற்றை அது நியமிக்கின்றது. இக்'கமிட்டி'கள், விஷயங்களைத் தீர ஆராய்ந்து, முடிவுகளைச் சபைக்குத் தெரியப்படுத்துகின்றன. இக்கமிட்டிகளின் கூட்டங்கள் யாவும் இவ்வறைகளிலேயே நடைபெறும்; அதனுல்தான் இவற்றிற்குக் 'கமிட்டி' அறைகள் எனப் பெயர்."



*இந்தியத் தலைவர்களுடன் ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸின் ஆலோசனை*

இரண்டாவது, மூன்ருவது மாடிகளிலிருந்த அறைகளைப் பார்த்த லீலா "இவை என்ன அறைகள்?" என வினவினுள்.

"பார்லிமெண்ட் உத்தியோகஸ்தர்களின் 'ஆபீஸ்' அல்லது அலுவலக அறைகள். பார்லிமெண்ட் திறமையாகவும் சிரமமின்றியும் தனது வேலைகளைச் செய்து மக்களுக்குத் தனது கடமைகளைச் சரிவர நிறைவேற்றிவருவதற்கு அங்கே அலுவல் புரிந்து வரும் அதிகாரிகள், குமாஸ்தாக்கள், பணியாட்கள் முதலியவர்களே உதவி செய்கின்றனர். சரி, நேரமாகிவிட்டது; இப்போது வீட்டிற்குப் போகலாம். புறப்படுவதற்குமுன் பார்லிமெண்ட்டின் நாளைய கூட்டத்தை நீங்கள் பார்ப்பதற்குத் தேவையான அனுமதிச் சீட்டுகள் பெறுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். வாருங்கள், போகலாம்," என்றுகூறி அவர்களை விசாரணை—அலுவலகம் இருந்த பக்கமாக அழைத்துச் சென்ருர் கேசவன்.

## வினாக்கள்

1. பார்லிமெண்ட் கட்டிடத்திற்குத் தகுதியான வடிவம் வட்டமே என ஏன் நிர்மலா நினைத்தாள் ?

2. பார்லிமெண்ட் மாளிகையில் மந்திரிகளுக்கு அலுவலக அறைகள் இருக்கவேண்டியதன் அவசியம் யாது ?

3. பார்லிமெண்ட்டின் எழிலுக்கும் சிறப்பிற்கும் இந்தியாவின் எல்லாப் பகுதிகளும் எவ்வாறு உதவியுள்ளன?

4. அங்கத்தினர்களுக்கு என்னென்ன வசதிகள் அளிக்கப்பட்டுள்ளன ?

5. பார்லிமெண்ட் மாளிகையின் நடு மண்டபம் எங்ஙனம் இந்தியா முழுவதற்கும் சின்னமாகவும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இடமாகவும் இருக்கின்றது ?

6. 'கமிட்டி' அறைகள் என்னென்ன அலுவல்களுக்காகத் தேவைப்படுகின்றன ?

# 7. பார்லிமெண்ட்டின் திறப்புவிழா

அன்று பார்லிமெண்ட்டின் 'பட்ஜெட்' அல்லது வரவு செலவுக் கணக்குத் திட்டக் கூட்டத்தின் முதல் நாள். அன்று பிற்பகல் ஒன்றரை மணிக்கு நடு மண்டபத்தில் பார்லிமெண்ட்டின் இரு சபைகளும் ஒன்றுகக் கூடு மென்றும் ராஷ்டிரபதி ஒரு பிரசங்கத்துடன் பார்லிமெண்ட் கூட்டத்தைத் துவக்கிவைப்பார் என்றும் கேசவன் தமது மனைவியிடமும் குழந்தைகளிடமும் முன்னதாகவே கூறி யிருந்தார். அவர்கள் பன்னிரண்டு மணிக்கு வீட்டிலிருந்து புறப்பட்டனர். பார்லிமெண்ட் மாளிகையின் முன்வாயிலை அடைந்ததும், கட்டிடத்தின் எல்லா வாயில்களிலும் போலீஸ்காரர் நின்றுகொண்டிருந்ததை அவர்கள் கவனித் தனர்; தங்களிடமிருந்த அனுமதிச் சீட்டுக்களைக் காவற் காரனிடம் காண்பித்தவுடன் உள்ளே செல்ல அனுமதிக் கப்பட்டனர்.

"இங்கே எதற்காகப் போலீஸார் இருக்கின்றனர்?" எனக் கேட்டான் சேகர்.

"சபை நடைபெறும்போது பார்லிமெண்ட் கட்டி டத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவே அவர்கள் இங்கே அமர்த்தப் பெறுகின்றனர். அனுமதி பெற்றவர்கள் தவிர வேறெவரும் உள்ளே நுழையாமல் அவர்கள் கவனித் துக்கொள்ளவேண்டும். பார்லிமெண்ட் மாளிகையின் காரியதரிசியிடமிருந்து பெற்ற அனுமதிச் சீட்டின்றி அவர்கள் ஒருவரையும் உள்ளே செல்ல விடமாட்டார்கள்," எனப் பதிலளித்தார் கேசவன்.

"வெளியே பாதையிலும் போலீஸார் இருக்கின்றனரே?" என வினவினுள் லீலா.

"இன்று ராஷ்ட்ரபதி பார்லிமெண்ட் கூட்டத்தைத் திறந்துவைப்பதற்காகத் தமது பவனத்திலிருந்து ஊர்வலமாக வருகின்ருர்; ஆதலால்தான் வெளியேயும் போலீஸார் இருக்கின்றனர்," என மறுமொழி யளித்தார் கேசவன்.

அவர்கள் விசாரணை–அலுவலகத்திற்கருகில் வந்ததும், பலர் முதல் மாடிக்குச் செல்லும் படிக்கட்டுக்களின் மீது ஏறிப் போய்க்கொண்டிருந்ததைக் கவனித்தனர்.

"இவர்கள் எல்லோரும் எங்கே செல்கின்றனர்?" என வினவினுன் சேகர்.

"நம்மைப்போல் இவர்களும் சபையின் நடவடிக்கைகளைப் பார்ப்பதற்காக வந்திருப்பவர்களே; நடு மண்டபத்தின் மேல்மாடத்தில் அடுக்கடுக்காக அமைக்கப் பெற்றிருக்கும் ஆசனங்களுக்குத்தான் போகின்றனர். உங்களையும் அங்கே விட்டுவிட்டு, நான் கீழே எனது இடத்திற்குச் செல்கிறேன்," என்ருர் கேசவன்.

நிர்மலாவும் குழந்தைகளும் தங்கள் இடங்களில் அமர்ந்துகொண்டனர்; முன்னதாகவே இடங்கள் யாவும் நிரம்பிவிட்டன. கேசவன் கீழே சென்ருர். சில அங்கத்தினர்கள் கும்பல் கும்பலாக நின்றுகொண்டு அளவளாவிக் கொண்டிருந்தனர். வேறு சிலர் தங்கள் ஆசனங்களில் அமர்ந்துகொண்டிருந்தனர். ஆசனங்கள் எல்லாம் வரிசை வரிசையாக மேடையை நோக்கியவாறு அமைக்கப்பெற்றிருந்தன. ஒன்றரை மணிக்கெல்லாம் அனைவரும் அவரவர் ஆசனங்களில் அமர்ந்துவிட்டனர்; மண்டபத்திலும் மேல் மாடங்களிலும் நிச்சப்தம் நிலவியிருந்தது.

சற்று நேரத்திற்கெல்லாம் மேடையை நோக்கியிருந்த வாயிலுக்கருகில் "பார்லிமெண்ட் அங்கத்தினர்களே!

ராஷ்ட்ரபதி வருகிறார்!'' என ஓர் அதிகாரி அறிவித்தார். அதைச் செவியுற்ற அனைவரும் உடனே எழுந்து நின்றனர். 5-ஆவது வாயில் வழியாக அப்போதுதான் மண்டபத்தை யடைந்த ராஷ்ட்ரபதி இடைவாயிலிலிருந்து இறங்கி, மெல்ல நடந்துவந்து, மேடையை நோக்கிச் சென்றார். அவருக்கு முன்னால் இருசபைகளின் காரியதரிசிகளும் ஒரே வரிசையில் சென்றனர். அடுத்தாற்போல் லோக சபையின் சபாநாயகரும் ராஜ்ய சபையின் அக்கிராசனரும் தத்தம் காரியதரிசிகளுக்குப் பின்னால் வந்தனர். அவர்களுக் குப் பின்னால் ராஷ்ட்ரபதியும், அவருக்கு அடுத்தபடியாக ராஷ்ட்ரபதியின் இரு மெய்க்காவலரும் வந்தனர். கடைசி யில் இராணுவக் காரியதரிசியும் ராஷ்ட்ரபதியின் காரிய தரிசியும் வந்தார்கள். மேடையை அணுகியதும் காரிய தரிசிகளும் ராஷ்ட்ரபதியின் சிப்பந்திகளும் நின்றுவிட்ட னர். ராஷ்ட்ரபதியும் இரு சபைகளின் தலைவர்களும் மேடையின் மீது ஏறினர். அங்கத்தினர்களும் மேல் மாடங்களிலிருந்த பொதுமக்களும் அந்நேரம் முழுவதும் நின்றுகொண்டேயிருந்தனர்; ராஷ்ட்ரபதி தமது பீடத்தில் அமரும்வரை அவர்களும் உட்காரவில்லை. ராஷ்ட்ரபதி அமர்ந்ததும் அனைவரும் உட்கார்ந்துகொண்டனர். சபை களின் காரியதரிசிகள் இருவரும், இராணுவக் காரியதரிசி யும் மேடைக்குக் கீழே போடப்பட்டிருக்கும் ஆசனங்களில் அமர்ந்தனர்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு ராஜ்ய சபைத் தலைவர் எழுந்திருந்து, பார்லிமெண்ட்டின் திறப்புரையை நிகழ்த்து மாறு ராஷ்ட்ரபதியை வேண்டிக்கொண்டார். அப்போது ராஷ்ட்ரபதி எழுந்திருந்து தமது பிரசங்கத்தை ஹிந்தியில் வாசிக்கத் தொடங்கினார்.

லீலா தனது தாயிடம் "ராஷ்ட்ரபதி ராஜேந்திர



ராஷ்ட்ரபதி பார்லிமெண்ட் நடுமண்டபத்திற்குச் செல்லுகிறார்

பிரஸாத் என்பவர் இவர்தானா, அம்மா?'' என மெதுவாகக் கேட்டாள்.

"ஆம். நமது குடியரசின் முதற் தலைவர் இவரே. ராஷ்ட்ரபதி என்றும் இவர் அழைக்கப்பெறுகின்றார்,'' என விடையளித்தாள் நிர்மலா.

'' அவருக்கு இரு புறத்திலும் அமர்ந்திருப்போர் யார்?'' என வினவினான் சேகர்.

"உனக்குத் தெரியாதா? இடது பக்கத்தில் இருப்பவர் லோக சபையின் சபாநாயகர்; மற்றொருவர் ராஜ்ய சபையின் அக்கிராசனர்; இந்தியாவின் உபராஷ்ட்ரபதியும் அவரே.''

"மேடைக்குக் கீழே உட்கார்ந்திருக்கும் உத்தியோகஸ்தர்கள் யார்?''

'' ஒருவர் லோக சபையின் காரியதரிசி; மற்றொருவர் ராஜ்யசபையின் காரியதரிசி. இராணுவ உடையில்



ராஜேந்திர பிரசாத் ராஷ்ட்ரபதி பதவி ஏற்றுக்கொள்ளும் காட்சி

இருக்கும் உத்தியோகஸ்தர் ராஷ்டிரபதியின் இராணுவக் காரியதரிசி; எல்லாப் பொது விழாக்களிலும் சம்பிரதாய வைபவங்களிலும் ராஷ்ட்ரபதியைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டியது இவருடைய கடமை."

"ராஷ்ட்ரபதி என்ன சொல்லிக்கொண்டிருக்கின்ருர்?"

"பார்லிமெண்ட்டின் ஒவ்வொரு முக்கியமான கூட்டமும் ராஷ்ட்ரபதியின் உரையுடன் தொடங்கும். தமது அரசாங்கம் இதற்குமுன் நிறைவேற்றிய அரிய சாதனைகளைப் பற்றிய விவரங்கள், அதன் எதிர்காலக் கொள்கை, இனி அது செய்ய உத்தேசித்திருப்பவை, அக்கூட்டத்தில் பார்லிமெண்ட்டினுல் அங்கீகரிக்கப்படவேண்டிய சட்டங்கள்—இவைபற்றிப் பொதுவாக அவ்வுரையில் அவர் குறிப்பிடுவார்."

"ஆனுல், ஏன் அவர் ஹிந்தியில் பேசுகின்ருர்? பல அங்கத்தினர்களுக்கு, சிறப்பாக, தென் பகுதியிலிருந்து வந்திருக்கும் அங்கத்தினர்களுக்கு அவர் சொல்வதைப் புரிந்துகொள்வது முடியாதே!"

"உண்மையே. எனினும், ஹிந்தி நமது தேசீய மொழி. சுதந்திரம் கிடைக்கும்வரை அரசாங்க அலுவல்களுக்கு ஆங்கிலத்தையே நாம் பயன்படுத்திவந்தோம். இப்போது சுதந்திரமுள்ளோராக இருப்பதால் நமது மொழி என்று ஒன்று இருக்க வேண்டுமல்லவா? நம் நாட்டில் பெரும் பான்மையோர் ஹிந்தியில் பேசுவதாலும் அதைப் புரிந்து கொள்வதாலும் அதையே ஆட்சிமொழியாகஏற்றுக்கொண்டிருக்கின்ருேம்."

"ஆனுல், இந்தியாவில் உள்ள எல்லோருக்கும் ஹிந்தி புரியாதே; அனைவரும் ஹிந்தி பேசுவதில்லையே!"

"ஹிந்தி தெரியாதவர்கள் இப்போதிருந்து அதைக்

கற்றுக்கொள்ள வேண்டும். அதற்காகத்தான் பதினேந் தாண்டுகளுக்கு ஆங்கிலம் வழக்கத்தில் இருக்குமென்றும் அதற்குப் பின்னர் ஹிந்தியே அரசாங்க அலுவல்களுக்குப் பயன்படுத்தப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது,'' என்ருள் நிர்மலா.

''பள்ளிக்கூடத்தில் நாங்கள் ஹிந்தி கற்றுக்கொள்கின்ரேம்,'' என்ருள் லீலா.

இதற்குள்ளாக ராஷ்ட்ரபதி தமது பேச்சை முடித்து விட்டு உட்கார்ந்து விட்டார். லோக சபையின் சபாநாயகர் எழுந்து ராஷ்ட்ரபதியின் திறப்புரைக்காக அவருக்கு நன்றி கூறினர். மீண்டும் சபையோர் அனைவரும் எழுந்துநின்று மரியாதை செய்தபின், ராஷ்ட்ரபதி மேடையிலிருந்து இறங்கி, முன்வந்த அதிகாரிகளுடன் மண்டபத்தின் வழியாக வெளியே சென்ருர்.

முழுநிகழ்ச்சியும் முடிவதற்கு ஏறக்குறைய ஒரு மணி நேரம் ஆயிற்று. நிகழ்ச்சி முடிவுற்றதும் ஏற்பட்ட இரைச்சலுக்கிடையே அங்கத்தினர்களும் பார்லிமெண்ட் நடவடிக்கைகளைக்காண வந்திருந்த பொதுமக்களும் கலந்து செல்லத் தொடங்கினர்.

''இப்போது நாம் வீட்டிற்குப் போகலாம். உங்கள் தந்தை, விரைவிலேயே ஆரம்பமாகப்போகும் லோக சபைக் கூட்டத்திற்குப் போய்விடுவார். இன்னெரு நாள் இரண்டு சபைகளுக்கும் நம்மை அழைத்துச் செல்வார்,'' என்று சொல்லிக்கொண்டே எழுந்தாள் நிர்மலா.

வினக்கள்

1. ராஷ்ட்ரபதி பார்லிமெண்ட் கூட்டத்தைத் திறந்து வைக்கும்போது அவருடன் இருக்கும் அதிகாரிகள் யார் யார் என்பதைக் கூறு.

2. ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டியதன் அவசியம் யாது?

3. ராஷ்ட்ரபதியின் திறப்புரையில் பொதுவாக என்னென்ன விஷயங்கள் குறிப்பிடப்படுகின்றன ?

4. பார்லிமெண்ட்டின் 'பட்ஜெட்' கூட்டத்தின் முதல் நாளன்று நீ பார்த்த நிகழ்ச்சிகளைப்பற்றி உனது நண்பனுக்கு ஒரு கடிதம் வரைக.

# 8. பார்லிமெண்ட் அலுவல் புரிகின்றது—1

மறுநாள், கேசவன் தமது குடும்பத்தினரை லோக சபைக் கட்டிடத்திற்கு அழைத்துச் சென்ருர். முதல் மாடியிலிருக்கும் மேல் மாடங்களுக்குப் போவதற்கு முன் கட்டிடத்தின் உட்புற, வெளிப்புற இடைவாயில் ('லாபி')களைக் கேசவன் அவர்களுக்குக் காண்பித்தார். உட்புறமாக இருந்த இடைவாயிலில் அங்கத்தினர் சிலர் உட்கார்ந்திருந்தனர்; சபையில் அன்று விவாதத்திற்கு வரப்போகும் சில முக்கியமான விஷயங்களைப்பற்றி அவர்கள் சர்ச்சை செய்துகொண்டிருந்தனர்.



*லோக சபையின் உட்புறம்*

"இதுவே அங்கத்தினர்களின் 'லாபி.' அவர்கள் இங்கே ஓய்வாக உட்கார்ந்துகொண்டு கட்டுப்பாடு எதுவுமின்றி விஷயங்களை விவாதிக்கலாம்," எனப் புகன்றார் கேசவன்.

அவர்களை முதல் மாடிக்கு அழைத்துப் போய்க் கட்டிடம் முழுவதையும் சுற்றிக் காண்பித்தார். நடு மண்டபத்தைப் போலல்லாது லோகசபைக் கட்டிடம் அரை வட்ட வடிவில் அமைக்கப்பெற்றிருந்தது. விமானம் எதுவுமின்றிச் சமதளமான தாழ்ந்த மச்சுடன்கூடிய கட்டிடம் அது. மேல் மாடத்திலும் கீழேயும் போடப்பட்டிருந்த ஆசனங்கள் வளைவான வரிசைகளில் அமைக்கப் பெற்றிருந்தன. அரைவட்ட அமைப்பின் இரு நுனிகளையும் இணைக்கும் நேர் கோட்டின் மத்தியில் உள்ள மேடை ஒன்றின்மீது சபாநாயகரின் ஆசனம் இருந்தது. ஆசனத்தின் உச்சியில் சிம்ம இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது.

"சபாநாயகர் அமரும் ஆசனம் இதுதான்," எனக் கூறிக் கேசவன் மேடையின் நடுவிலிருந்த பீடத்தைச் சுட்டிக் காட்டினார்.

"அதற்குக் கீழே இருக்கும் நாற்காலியில் யார் உட்காருவார்?" எனக் கேட்டான் சேகர்.

"அது சபையின் காரியதரிசி உட்காருவதற்காக இருப்பது. சபையின் கூட்டங்கள் நடைபெறுவதற்கும் அதன் நடவடிக்கைகளை வெளியிடுவதற்கும் வேண்டுமான ஏற்பாடுகளைச் செய்பவர் அவரே."

காரியதரிசியின் நாற்காலிக்கு முன்புறமிருந்த மேசையைப் பார்த்த லீலா "இம்மேசை எதற்காக உள்ளது?" என வினவினாள்.

"'சபையின் மேசை' எனப்படுவது இதுவே. பார்லி



சபாநாயகரின் ஆசனம்

மெண்ட்டில் சமர்ப்பிக்கப்படும் முக்கியமான பத்திரங்கள் யாவும், அங்கத்தினர்கள் தெரிந்துகொள்ளும் பொருட்டு, இம்மேசையின் மீதே வைக்கப்படுகின்றன.''

சபாநாயகரின் ஆசனத்திற்கு இருபுறமுமிருக்கும்,

அடைப்புக்களுடன்கூடிய தனியிடங்களைக் கவனித்த நிர்மலா " இத் தனியிடங்கள் எவருக்காக இருப்பவை ?" எனக்கேட்டாள்.

" சபாநாயகரின் ஆசனத்திற்கு வலதுபக்கம் இருப்பது அரசாங்க அதிகாரிகள் உட்கார்ந்துகொள்வதற்காக அமைக்கப்பெற்றுள்ளது; மந்திரிகளுக்குத் தேவையான தகவல்களைக் கொடுத்து உதவிபுரிவதற்காகச் சில அதிகாரிகள் சபையில் இருக்கவேண்டியிருக்கும்; அவர்கள் உட்காரும் இடம் இதுதான். இடதுபுறமுள்ள பிரத்தியேக அடைப்பில் ராஷ்ட்ரபதியின் விருந்தினர், அவருடைய குடும்பத்தினர், சபாநாயகரின் உத்தரவின்பேரில் அங்கே உட்கார அனுமதிக்கப்படும் மேன்மைபொருந்திய பெருமக்கள் ஆகியோர் உட்கார்ந்துகொள்கின்றனர்."

" இடது கோடியில் இருக்கும் அப்பெரிய கண்ணுடிப் பெட்டி எதற்காக அமைக்கப்பட்டுள்ளது ?" என்றுன் சேகர்.

" அதுதான் 'ஒலிக்கட்டுப்பாடு அறை.' சபையில் விவாதம் நடக்கும்போது அதனுள் ஒருவர் உட்கார்ந்து கொண்டு பேசுபவரின் குரலின் அளவைத் தேவைக்குத் தக்கவாறு கட்டுப்படுத்துகின்றுர். மண்டபத்தில் ஆங்காங்கே உயரமான கம்பங்கள் இருப்பது தெரிகின்றதல்லவா ? அவை யாவும் சக்திவாய்ந்த 'மைக்ரபோன்'கள்; பன்னிரண்டு அடி தூரத்திலிருந்து பேசிஞலுங்கூட அதைக் கிரகித்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றவை. இதஞல் அங்கத்தினர்கள் அவரவரிடங்களிலிருந்துகொண்டே பேசுவது எளிதாயிருக்கின்றது. அன்றியும், அங்கத்தினரின் ஆசனம் ஒவ்வொன்றிலும் பின்புறமாக ஓர் 'ஒலி பெருக்கி' மறைவாகப் பொருத்தப்பட்டுள்ளது. அங்கத்தினர் தமது ஆசனத்திலிருந்து பேசிஞல் மைக்ரபோனின்

வழியாகவரும் ஒலி இயற்கையானதாகவும் மென்மையானதாகவும் இருக்கும்படி செய்யப்படுகின்றது."

"இது ஒரு நல்ல ஏற்பாடாகவே தோன்றுகிறது. மேல் மாடங்களில் அமர்ந்திருப்போரும் பேச்சுக்களைத் தெளிவாகக் கேட்கமுடியுமா?"

"ஓ, கேட்கமுடியும். மேல் மாடங்களிலும் ஒலிபெருக்கிகள் பொருத்தப்பட்டுள்ளன."

சபாநாயகரின் ஆசனத்திற்கு எதிர்ப்புறமாக மேல் மாடத்திற்குக் கீழேயிருந்த படத்தைப் பார்த்த சேகர் "இது எவருடைய படம்?" என வினவினன்.

"பழைய மத்திய சட்டசபையின் முதலாவது தேர்ந்தெடுக்கப் பெற்ற தலைவர் விட்டல்பாய் படேல் என்பவரின் படம்."

சபாநாயகரின் ஆசனத்திற்கு மேலே மின்சார ஒளியில் துலங்கும் வாசகத்தைக் கண்ட லீலா "அதில் என்ன எழுதப்பட்டுள்ளது?" எனக் கேட்டாள்.

"'தர்ம சக்ர ப்ரவர்த்தனய' என எழுதப்பட்டுள்ளது. தருமம் அல்லது அறம் என்னும் சக்கரம் இயங்கட்டும் என்பதே அதன் பொருள்."

"அதை இங்கே ஏன் எழுதியிருக்கின்றனர்?"

"நாட்டை ஆள்வதற்குத் தேவையான சட்டங்களை இயற்றுவது இச்சபையே என்பதுதான் உனக்குத் தெரியுமே! அறத்தை நிலைநிறுத்துவதற்காக இருப்பவையே சட்டங்கள். அறத்தை நிலைநிறுத்தும்பொருட்டு நேர்மையான சட்டங்களையே இயற்றவேண்டும் அல்லவா? அந்தக் கடமையை அங்கத்தினர்களுக்கு இது நினைப்பூட்டிக் கொண்டிருக்கின்றது."

இதற்குள் அங்கத்தினர்கள் ஒவ்வொருவராக வந்து தத்தம் ஆசனங்களில் அமர்ந்துகொண்டனர். சபையின்

காரியதரிசி, அவருக்கு உதவிசெய்யும் அதிகாரிகள் அனை வரும் வந்துவிட்டனர்.

குறித்த நேரத்தில் சபையின் பாதுகாப்பு அதிகாரி சபாநாயகரின் ஆசனத்திற்குப் பின்னுல் மேடையின்மீது வந்து "அங்கத்தினர்களே, சபாநாயகர் வருகின்ருர்," என அறிவித்தார். உடனே சபையோர் அனைவரும் எழுந்து நின்றனர். பாதுகாப்பு அதிகாரியின் பின்னுல் வந்த சபாநாயகர் கீழே இறங்கி, சபையை மூன்று தடவை வணங்கிவிட்டுத் தமது ஆசனத்தில் அமர்ந்தார்.

பிறகு, காரியதரிசி எழுந்திருந்து அங்கத்தினர் ஒருவ ரின் பெயரைக் கூப்பிட்டார். அவ்வங்கத்தினர் சபாநாய கருக்கு வலதுபுறமிருந்த காரியதரிசியின் மேஜையின் பக்கத்தில் வந்தார். பார்லிமெண்ட் அங்கத்தினர் எடுத்துக் கொள்ளவேண்டிய உறுதிமொழியின் நமூனு ஒன்று அவருக்குக் கொடுக்கப்பட்டது. அதை அவர் வாசித் தார்:—"நந்தலால் எனப்படும் நான் லோகசபையின் ஓர் அங்கத்தினனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறபடியால், சட்டத்தினுல் ஏற்படுத்தப்பட்ட இந்திய அரசியலமைப்பில் உண்மையான நம்பிக்கையும் பக்தியும் கொண்டிருப்பேன் என்றும், நான் இப்போது ஏற்கப்போகும் கடமையை நேர்மையாக நிறைவேற்றுவேன் என்றும் கடவுள் பெயரால் சத்தியம் செய்கிறேன்."

"என்ன நடக்கிறது, அம்மா?" என்று தணிந்த குரலில் சேகர் தன் தாயை வினவினுன்.

"இவ்வங்கத்தினர் பார்லிமெண்ட்டிற்குப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். ஒவ்வொரு புதிய அங்கத்தி னரும் சபையின் பூரண அங்கத்தினராக ஆவதற்குமுன் 'விசுவாசப் பிரமாணம்' அல்லது 'நம்பிக்கை உறுதிமொழி'



காலஞ்சென்ற திரு. மவ்லங்கருடன் டாக்டர் இராதாகிருஷ்ணன்

எடுத்துக்கொள்ளவேண்டும்,'' என விடையளித்தாள் நிர்மலா.

அவ்வங்கத்தினர் உறுதிமொழியை வாசித்து முடித்ததும் சபாநாயகரிடம் சென்று அவருடன் கைகுலுக்கினர். பிறகு சபாநாயகரின் ஆசனத்திற்குப் பின்பக்கமாக மறுபுறம் சென்று, அங்கத்தினர்களின் பெயர்களடங்கிய

புத்தகத்தில் கையொப்பமிட்டுவிட்டுத் தம்முடைய ஆசனத்திற்குத் திரும்பிப் போய்விட்டார். அதேமுறையில் இன்னும் சில அங்கத்தினர்களும் விசுவாசப் பிரமாணம் செய்தனர். பின்னர், கேள்விகள் ஆரம்பமாயின.

முதலில் சபாநாயகர் அங்கத்தினர் ஒருவரின் பெயரைக் கூப்பிட்டதும் அவர் தமது இடத்திலேயே எழுந்து நின்றுகொண்டு 'கேள்வி ஒன்று' என்ருர். மற்ருெரு அங்கத்தினர் எழுந்து அதற்குப் பதிலளித்தார். பிறகு சபாநாயகர் இன்னொரு அங்கத்தினரின் பெயரைக் கூப்பிட்டதும் அவரும் கேள்வியின் எண்ணைக் குறிப்பிட்டார்; வேறொரு அங்கத்தினர் அதற்கு விடை கூறினர். சற்று நேரம் இது நடைபெற்றது. குழந்தைகளுக்கு என்ன நடக்கிறது என்பது விளங்கவில்லை.

நிர்மலா அவர்களுக்கு விளக்கிச் சொன்னாள்:—
"பார்லிமெண்ட்டில் கேள்வி-நேரம் எனப்படுவது இதுதான். ஒவ்வொரு தடவையும் சபை தொடங்கும்போது முதல் ஒரு மணி நேரம் கேள்விகள் கேட்பதற்கும் அவற்றிற்குப் பதிலளிப்பதற்கும் ஒதுக்கப்படுகிறது. கேள்வியின் எண்ணைக் குறிப்பிடும் அங்கத்தினர் கேள்வியைக் கேட்பவர்; அதற்குப் பதிலளிப்பவர் ஒரு மந்திரி."

"ஆனல் எண்ணைமாத்திரம் குறிப்பிட்டவுடன் கேள்வி என்ன என்பது அவருக்கு எங்ஙனம் தெரியும்?" எனக் கேட்டாள் லீலா.

"ஒவ்வொரு நாளும் கேட்கப்படும் கேள்விகள் ஏராளமானவை; தவிரவும், ஒவ்வொரு கேள்விக்கும் பதில் தயாரிப்பதற்கு மந்திரிகளுக்குச் சிறிது நேரமும் கொடுக்கப்படவேண்டும். எனவே, கேள்விகள் யாவும் மந்திரிகளுக்கு முன்னதாகவே அனுப்பப்பட்டுவிடுகின்றன. அவற்றை அச்சிட்டு இலக்கமிட்டுவிடுகின்றனர். அச்

சடிக்கப்பட்ட பிரதிகள் எல்லா அங்கத்தினர்களிடத்திலும் இருக்கும். குறிப்பிட்ட தினத்தில் குறிப்பிட்ட அங்கத்தினரின் கேள்வி வரும்போது சபாநாயகர் அவருடைய பெயரைக் கூப்பிடுகின்ருர். நேரம் வீணுகாமலிருப்பதற்காக அவ்வங்கத்தினர் கேள்வி முழுவதையும் படிக்காமல் கேள்வியின் எண்ணைமட்டும் குறிப்பிடுகின்ருர். அப்போது மந்திரி விடை யளிக்கின்ருர்."

"அங்கத்தினர்கள் ஏன் கேள்வி கேட்கின்றனர்?"

"அங்கத்தினர்கள் மக்களின் பிரதிநிதிகள் அல்லவா? அரசாங்கம் மக்களுடைய நலத்திற்காகவும் அவர்களுடைய விருப்பத்திற்கேற்பவும் நடந்துவருகின்றதா என்பதைக் கவனிக்கும்பொறுப்பு அங்கத்தினர்களுடையதே அல்லவா? பல்வகை விஷயங்களைப்பற்றிக் கேள்வி கேட்பதனுல் அரசாங்கம் என்னென்ன செய்துவருகிறது என்பதைப் பற்றிய விவரம் மக்களுக்குத் தெரிகின்றது. சில சமயம் பெருந்தவறுகள் கூட இத்தகைய கேள்விகளால்தான் எல்லோருடைய கவனத்திற்கும் கொண்டுவரப்பட்டுத் திருத்தப்படுகின்றன."

"சபையில் எத்தனை அங்கத்தினர்கள் இருக்கின்றனர்?" என விசாரித்தாள் லீலா.

"தற்போது இருப்பவர்களின் எண்ணிக்கை 499. ஆனுல், நிர்ணயிக்கப்பெற்ற ஸ்தானங்களின் எண்ணிக்கை 500."

"இவ்வங்கத்தினர்கள் அனைவரும் மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்பெற்றவர்களா?"

"ஆம். ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை நடத்தப்பெறும் தேர்தல்களில் மக்களால் நேரிடையாக இவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்."

'சர்க்கார் ஆசனங்கள்' இருந்த முன்வரிசையைச்

சுட்டிக்காட்டிச் சேகர் "இதோ, நமது பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு பேசுவதற்காக எழுந்திருக்கிறார்," என்றான்.




பிரதம மந்திரி நேரு

"சபையின் தலைவரும் அவரே. ஒரு முக்கியமான தீர்மானத்தைக் கொண்டுவரப்போகின்றார்," என்றாள் நிர்மலா.

"தலைவர் ஒருவர் எதற்காக இருக்கவேண்டும்? இச்சபையின் தலைவர் சபாநாயகர் அல்லவா?" என வினவினான் சேகர்.

"ஆம், உண்மைதான். ஆனால், சபாநாயகர் நடு நிலைமை வகிப்பவர்போன்றவர். பொதுவாகச் சபையில் பல கட்சிகள் இருக்கும். ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு தலைவர் இருப்பார். அரசாங்கத்தை நடத்தும் பெரும்பான்

மைக் கட்சியின் தலைவரே 'சபைத்தலைவர்' என்றழைக்கப் படுகின்றார். சபையில் விவாதத்திற்கு வரும் எல்லா முக்கியமான விஷயங்களிலும் அதிகப் பங்கெடுத்துக் கொள்பவர் அவரே. அவருடைய யோசனையின் பேரி லேயே சபையின் அலுவல்கள் யாவும் சபாநாயகரால் ஏற்பாடு செய்யப்படுகின்றன.''

''பிற கட்சித் தலைவர்கள் விஷயம் என்ன?'' எனக் கேட்டான் சேகர்.

''அடுத்த பெரும்பான்மைக் கட்சியின் தலைவருக்கு 'எதிர்க்கட்சித் தலைவர்' என்று பெயர். எதிர்க்கட்சியின் முக்கியமான வேலை என்னவென்றால், மக்களின் நலத்திற் கெதிராகச் சர்க்கார் எதுவும் செய்யாமலிருக்கும்பொருட் டுச் சர்க்காரின் செய்கைகளைக் கண்டித்து அவற்றைக் கண்காணித்து வருவதுதான். பெரும்பான்மைக் கட்சி சபையின் நம்பிக்கையை இழந்துவிட்டாலோ, சர்க்கார் ராஜிநாமாச் செய்துவிட்டாலோ ஆட்சிப் பொறுப்பை ஏற்று அரசாங்கத்தை நடத்துவதற்கு எதிர்க்கட்சி தயாராக இருக்கவேண்டும்.''

''இச்சபையில் எது எதிர்க்கட்சி?''

''தற்போது எதிர்க்கட்சி எனக் கூறத்தக்கதான கட்சி எதுவுமில்லை. சபையில் பல கட்சிகள் இருக்கின்றனவே யன்றி, பலமான எதிர்க்கட்சியை அமைக்கக்கூடியதாக ஒரு கட்சியும் இல்லை.''

சபையில் நடைபெறும் விஷயங்கள் சேகருக்கு விளங்கவில்லை; எனவே, அவன் தன் தந்தையிடம் ''அவர்கள் எதைப்பற்றி இப்போது விவாதித்துக்கொண் டிருக்கின்றனர்?'' என வினவினன்.

''ஒத்திவைப்புப் பிரேரணை ஒன்றைப்பற்றி அவர் கள் இப்போது விவாதித்துக்கொண்டிருக்கின்றனர். சபை

யின் நிகழ்ச்சி நிரலில் இல்லாத, ரயில் விபத்து அல்லது பெருங்கலவரம் போன்ற, மிக அவசரமான ஒரு பொது நிலைமையையோ விஷயத்தையோ சபை ஆலோசிக்க வேண்டுமென ஓர் அங்கத்தினர் விரும்பினால் அவர் சபையின் வழக்கமான அலுவல்களை மாலைக்கு ஒத்திவைக்குமாறு ஒரு தீர்மானத்தைக் கொண்டுவரலாம். கேள்வி நேரம் முடிந்தவுடன், ஒத்திவைப்பதற்கான அனுமதியை அவர் கேட்கவேண்டும். சபை அனுமதித்தால் அதன் வழக்கமான அலுவல்கள் நிறுத்தப்பட்டு, அவர் பிரேரித்த விஷயம் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். ஒத்திவைப்புத் தீர்மானம் அனுமதிக்கக்கூடியதா, அல்லவா என்பதைப்பற்றி அவர்கள் இப்போது விவாதித்துக்கொண்டிருக்கின்றனர்.''

''இவை எல்லாவற்றையும் புரிந்துகொள்வது கடினமாயிருக்கிறது,'' என்றான் சேகர்.

''ஆம். சபைக்குப் புதியவர்களாயிருந்தால் அங்கத்தினர்களுக்குக்கூட இந்நடைமுறை விதிகள் சரியாகத் தெரிவதில்லை. கவனித்து அனுபவம் பெற்றபின்னரே இவ்விவரங்களை யெல்லாம் அவர்கள் அறிந்துகொள்ளுகின்றனர்.''

''இவ்விதிகள் அனைத்தும் இருக்கவேண்டியது தானா?'' எனக் கேட்டாள் லீலா.

''ஆம். இவை இல்லாமற்போனால் ஒழுங்கின்மையும் குழப்பமும் சபையில் உண்டாகலாம். சபையில் விவாதம் ஒழுங்காகவும் கட்டுப்பாடுடனும் நடைபெறுவதற்காகவே இவ்விதிகள் இருக்கின்றன. அங்கத்தினர்கள் இவ்விதிகளை ஒழுங்காகக்கடைப்பிடிக்கின்றனரா என்பதைச் சபாநாயகரோ, அக்கிராசனரோ கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்.''

'' அங்கத்தினர்கள் அனைவரும் தனிச் சலுகை பெற்ற வர்கள் என்றல்லவா நினைத்தேன்! பள்ளிச்சிறுவர்களுக் கிருப்பதுபோல், அங்கத்தினர்களுக்கும் நிறையக் கட்டுப் பாடுகள் இருக்கின்றனவே!'' என்றான் சேகர்.

கேசவன் புன்சிரிப்புடன் கூறினான் :— '' நீ சொல்வது முற்றிலும் சரியே. உண்மையில், பள்ளிக்கூடங்களில் இருப் பதைப்போன்றே இங்கும் சில கட்டுப்பாடுகளும் விதிகளும் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, ஒவ்வொருநாளும் அங்கத்தினர்கள் சபையினுள் நுழையும்போது 'லாபி'யில், அதாவது, இடைவாயிலில் வைக்கப்பட்டிருக்கும் புத்தகம் ஒன்றில் கையொப்பமிடவேண்டும். அவர்கள் தங்களுடைய அடையாளச் சீட்டுக்களைக் கொண்டுவரவேண்டும்; இல்லா விடில் சபையின் பாதுகாப்பு அதிகாரிகள் அவர்களை உள்ளே அனுமதிக்க மறுத்துவிடலாம். சபாநாயகர் சபையினுள் வரும்போது அவர்கள் தத்தம் இடங்களில் எழுந்து நிற்கவேண்டும். ஆசனங்களில் அமர்ந்துகொள் ளும்போதும் எழுந்து வெளியே செல்லும்போதும் அவர்கள் சபாநாயகருக்கு வணக்கம் செலுத்தவேண்டும். சபை நடந்துகொண்டிருக்கும்பொழுது சபாநாயகருக்கும் பேசிக் கொண்டிருக்கும் அங்கத்தினருக்கு மிடையில் குறுக்கே அவர்கள் வரக்கூடாது. சபை அலுவல் செய்துகொண் டிருக்கும்போது தங்களுக்குள் அவர்கள் உரக்கப் பேசிக் கொள்ளக்கூடாது. சபையில் நடைபெறும் விவாதங்க ளுக்குச் சம்பந்தமில்லாத செய்தித் தாள்களையோ, புத்தகங் களையோ, பத்திரிகைகளையோ அவர்கள் படிக்கக்கூடாது. அவர்கள் பேச விரும்பினால் தங்கள் தங்கள் இடங்களில் எழுந்து நிற்கவேண்டும். 'சபாநாயகர் கண்ணில் பட்டு அவர் அனுமதி அளித்தால்தான் அவர்கள் பேசவேண்டும். சபாநாயகர் பேசிக்கொண்டிருக்கும்போது ஒருவரும்

எழுந்து நிற்கவோ, வெளியே போகவோகூடாது. அறுபது நாட்களுக்குச் சபைக்கு வராமலிருக்க எவரேனும் விரும்பிஞல் அவர் சபையின் அனுமதி பெறவேண்டும்."

"ஓ! இவை அனைத்தும் மிகவும் வேடிக்கையாகவே இருக்கிறது. கடைசியில் நம் தந்தைகூட ஒரு பள்ளிகூடத்துப் பையன் மாதிரிதான்!" என்று சொல்லி நகைத்தாள் லீலா.

"ஆஞல், வயதான பையன்!" என்ருள் நிர்மலா, விஷமமாகச் சிரித்துக்கொண்டே.

கேசவனும் இவ்வேடிக்கையில் கலந்துகொண்டார்; அவரும் அதை ரசித்தார் போலும்! "ஆஞல், சபைக்குள் எங்களுக்குப் பேசுவதற்கு முழுச்சுதந்திரம் இருக்கிறது, தெரியுமா? எதைப்பற்றியும் சிறிதும் அஞ்சாமற் பேசலாம்! எந்த ஸ்தாபனத்தையும் கண்டிக்கலாம்," என்ருர் கேசவன்.

கீழே சபைத் தலைவர் முக்கியமான தீர்மானம் ஒன்றைப் பிரேரித்து அதன்மீது விவாதத்தை ஆரம்பித்தார்.

"தீர்மானம் என்ருல் என்ன?" எனக் கேட்டான் சேகர்.

"பொதுமக்களைப் பொறுத்த எந்த முக்கியமான விஷயத்தையும் குறித்துச் சபையின் சிபாரிசையோ கருத்தையோ வெளியிடுவதே தீர்மானம் எனப்படுகின்றது. அங்கத்தினர் எவரும் தீர்மானத்தைப் பிரேரிக்கலாம்; அப்போது அதன்மீது விவாதம் நடைபெறும். விவாதத்தின் இறுதியில் அது சபாநாயகரால் 'ஓட்'டிற்கு, அதாவது, வாக்கெடுப்பிற்கு விடப்பெறும். சபை அதை ஏற்றுக்கொள்ளலாம் அல்லது நிராகரிக்கலாம்," என்று விளக்கமாகச் சொன்ஞள் நிர்மலா.

சிறிது நேரத்திற்குப் பிறகு, ராஷ்ட்ரபதிக்கு நன்றி கூறும் பிரேரணைமீது சபை விவாதம் செய்யத்தொடங்

கியது. அங்கத்தினர் ஒருவர் எழுந்திருந்து, முந்திய நாளன்று ராஷ்ட்ரபதி பார்லிமெண்ட்டில் நிகழ்த்திய பிரசங்கத்திற்காக அவருக்கு நன்றி தெரிவிக்கும் பத்திரம் ஒன்று சமர்ப்பிக்கப்படவேண்டும் எனப் பிரேரித்தார்.

"இது எதைப்பற்றியது?" என்றான் சேகர்.

"இதுவே 'நன்றி தெரிவிக்கும் பிரேரணை' எனப் படுகின்றது. லோக சபையின் அல்லது ராஜ்ய சபையின் தீர்ப்பைப்பெற விரும்பும் எந்த விஷயத்தையும் ஒரு பிரேரணை வாயிலாகவே சபைக்குக் கொண்டுவரவேண்டும். பிரேரணையை முன்னதாக அறிவித்திருக்கும் அங்கத்தினர் அவ்விஷயத்தை அறிமுகப்படுத்தி அதைப்பற்றிய விவாதத்தை ஆரம்பிப்பார். சபாநாயகர் அதை அங்கத்தினர்களின் விவாதத்திற்கு விடுகின்றார். அங்கத்தினர் பலர் அவ்விஷயத்தைப்பற்றிப் பேசுவார்கள். விவாதம் முடிவுற்றதும் சபாநாயகர் அதை ஒரு கேள்வி உருவத்தில் மீண்டும் சபைக்குச் சமர்ப்பிப்பார்; அப்போது அதன்மீது அங்கத்தினர்கள் 'ஓட்' செய்வார்கள்."

"நன்றி தெரிவிக்கும் பிரேரணை என்றால் என்ன?" என்றாள் லீலா.

"நேற்று ராஷ்ட்ரபதி பார்லிமெண்ட்டில் பிரசங்கம் செய்தார் அல்லவா? அதற்காக அவருக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணை அது. ஓர் அங்கத்தினர் அதைக் கொண்டுவருவார்; அதன்மீது இரண்டு, மூன்று நாட்கள் விவாதம் நடக்கும். ஒவ்வொரு கூட்டத்தின் தொடக்கத்திலும், அரசாங்கத்தின் கொள்கையையும் திட்டங்களையும் அங்கத்தினர்கள் பொதுவாக விவாதிப்பதற்கு ஒரு நல்ல வாய்ப்பு இது. விவாதம் முடிந்தவுடன் நன்றி தெரிவிக்கும் பத்திரம் ராஷ்ட்ரபதிக்குச் சம்பிரதாயமாகச் சமர்ப்பிக்கப்படுகின்றது."

சபாநாயகரின் ஆசனத்திற்கு நேர்மேலே யிருந்த பத்திரிகையாளர் ஆசனங்களைக் குறிப்பிட்டு "குறிப்புகள் எழுதிக்கொள்ளும் இவர்கள் யாவர்?" என வினவினாள் லீலா.

"இவர்கள் பத்திரிகை நிருபர்கள். ஒவ்வொரு பத்தி ரிகையும் பார்லிமெண்ட் நடவடிக்கைகளின் அறிக்கை யைத் தினந்தோறும் பிரசுரிக்கின்றது. சபையின் நடவடிக் கைகளைக் கவனித்து எழுதியனுப்புவதற்காக ஒவ்வொரு பத்திரிகையும் ஒரு பிரதிநிதியை அனுப்புகிறது."

"பார்லிமெண்ட் நடவடிக்கைளைப் பத்திரிகைகள் ஏன் வெளியிடுகின்றன?"

"வெளியேயிருக்கும் மக்கள் அனைவரும் தங்க ளுடைய சம்பூரண அதிகாரச் சட்டமன்றத்தில் என்ன நடக்கின்றது என்பதை அறிந்துகொள்ள விரும்புகின் றனர். இறுதியில், நாட்டை ஆளுபவர்கள் அவர்களே அல்லவா? எனவே, பார்லிமெண்ட்டில் என்ன நடக்கின்றது என்பதைத் தெரிந்துகொள்ளும் உரிமை அவர்களுக்கு உண்டு."

"அங்ஙனமாயின், பத்திரிகைகள் மக்களுக்குச் சிறந்த பணியாற்றுகின்றன," என்றான் சேகர்.

"காரியதரிசியின் மேஜைக்கருகில் உட்கார்ந்திருப் போரும் எதையோ எழுதிக்கொண்டிருக்கின்றார்களே?" எனக் கேட்டாள் லீலா.

"அவர்கள் அரசாங்க நிருபர்கள். சபையின் நடவடிக் கைகளை ஒரு வார்த்தைகூட விடாமல் எழுதுவதற்காகப் பார்லிமெண்ட்டினால் அவர்கள் நியமிக்கப்படுகின்றனர்," என்று மறுமொழியளித்தாள் நிர்மலா.

## வினுக்கள்

1. லோகசபைக் கட்டிடத்தில் அங்கத்தினர்கள் உட்காரு வதற்காகச் செய்யப்பட்டிருக்கும் வசதிகளை விவரி.
2. சபாநாயகரின் கடமைகள் யாவை ?
3. லோகசபையிலிருக்கும் 'ஒலிக்கட்டுப்பாடு' அமைப்பை விவரி.
4. லோகசபையில் மின்சார ஒளியில் துலங்கும் வாசகம் யாது ?
5. கேள்வி-நேரம் ஏன் மிகவும் பயனுள்ளதாய்க் கருதப் படுகின்றது ?
6. 'ஒத்திவைப்புப் பிரேரணை' என்றால் என்ன? அது எப்போது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப் படுகின்றது ?
7. அங்கத்தினர்கள் கடைப்பிடிக்கவேண்டிய முக்கியமான விதிகள் யாவை ?
8. 'சபாநாயகரின் கண்ணில்படுவது' என்றால் என்ன ?
9. பேச்சுச்சுதந்திரம் முக்கியமானதோர் உரிமையாக ஏன் கருதப்படுகின்றது?
10. 'நன்றி தெரிவிக்கும் பிரேரணை' என்றால் என்ன?
11. செய்தித்தாள்களின் பிரதிநிதிகளுக்கு ஏன் பிரத்தி யேகமான இடம் ஒதுக்கப்படவேண்டும் ?

# 9. பார்லிமெண்ட் அலுவல் புரிகின்றது—2

கேசவனும் அவரது குடும்பத்தினரும் மறுநாள் ராஜ்ய சபைக் கட்டிடத்திற்குச் சென்றனர்கள். அளவிலும் அமைப்பிலும் அது லோகசபைக் கட்டிடத்தைப்போன்றே யிருந்தது. லோகசபையில் இருப்பதுபோன்றே அங்கும் அங்கத்தினர் ஆசனங்கள், சபையின் அக்கிராசனர் அமரும் மேடை, மேல்மாடங்களில் அடுக்காசனங்கள், ஒலிக்கட்டுப்பாடுஅறை போன்ற ஏற்பாடுகள் யாவும் அமைக்கப்பெற்றிருந்தன. அவர்கள் சபையை அடைந்த போது அங்கத்தினர்கள் அனைவரும் ஏற்கனவேயே வந்து விட்டிருந்தனர். சபையின் நடவடிக்கைகளும் தொடங்கி யிருந்தன.

"இச்சபையில் எத்தனை அங்கத்தினர்கள் இருக்கின்றனர் ?" என வினவினன் சேகர்.

"இப்போதிருப்பவர்களின் எண்ணிக்கை 219; ஆனல், இச்சபையின் மொத்த ஸ்தானங்கள் 250; லோக சபை ஸ்தானங்களில் சரிபாதி," என்று கூறினர் கேசவன்.

"அவர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் களா ?"

"எல்லோரும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களல்லர். கலை, இலக்கியம், விஞ்ஞானம், சமூகத்தொண்டு ஆகிய வற்றில் சிறப்புற்று விளங்கும் பிரபலமான பன்னிருவர் ராஷ்டிரபதியால் அங்கத்தினர்களாக நியமிக்கப்படுகின்றனர். மற்ற அங்கத்தினர்கள் மறைமுகமாக, அதாவது, ஒவ்வொரு ராஜ்யத்தின் சட்டசபை அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பெறுகின்றனர். ஒவ்வொரு சட்டசபையும்

தேர்ந்தெடுக்கவேண்டிய அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.''

''அவர்களும் ஐந்து ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனரா?''

''இல்லை. லோகசபை போலல்லாது ராஜ்யசபை ஒரு நிரந்தரமான சபை. அது ஒருபோதும் கலைக்கப்படுவதில்லை; ஆனால், இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மூன்றிலொரு பங்கு அங்கத்தினர்கள் சபையிலிருந்து நீங்குகின்றனர். அவர்கள் ஸ்தானங்களில் புதிய அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர், அல்லது, நியமிக்கப்படுகின்றனர்.''

அப்போது, சபையின் தீர்மானத்தைப் பெறவிருக்கும் ஒரு மசோதாவைப்பற்றிய விவாதம் தொடங்கியது.

''மசோதா என்றால் என்ன?'' எனக் கேட்டாள் லீலா

''அரசாங்கம் நல்ல முறையில் இயங்குவதற்காகவும் மக்களின் வாழ்வு நலம்பெறுவதற்காகவும் தேவையான சட்டங்களை இயற்றுவதே பார்லிமெண்டின் முக்கியமான கடமையாகும். ஒவ்வோராண்டும் வரவு செலவுக் கணக்குத் திட்டத்தை ஒப்புக்கொண்டு சர்க்காரின் செலவுகளுக்காகப் பணத்தைப் பங்கீடு செய்வதும், அப்பணம் கிடைப்பதற்காக மக்கள்பேரில் வரிவிதிப்பதும் பார்லிமெண்டேயாகும். பார்லிமெண்டின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப்படும் நகல் சட்டங்களே மசோதாக்கள் எனப்படுகின்றன. ஒவ்வொரு மசோதாவும் நிறைவேற்றப்படுவதற்குமுன் அது சபையில் மூன்றுதரம் வாசிக்கப்படவேண்டும். முதலில், மசோதாவைக்கொண்டுவரும் அங்கத்தினர் அதைச் சபையில் கொண்டுவருவதற்கு அனுமதி கோருவார். சபாநாயகரோ, சபையின் அக்கிராசனரோ சபையின் சம்மதத்தைத் தெரிவிக்குமாறு கூறுவார். எவரும் அதை எதிர்க்காமலிருந்தால், அல்லது, அனுமதி

யளிப்பதற்குப் பெரும்பான்மையோர் சாதகமாக இருந்தால் மசோதாவைக் கொணர்வதற்கு அனுமதி யளிக்கப்படு கின்றது எனச் சபாநாயகர் அறிவிப்பார்; உடனே அங்கத்தினர் அதை அறிமுகப்படுத்துவார். இங்கிலேயில் விவாதம் எதுவும் நடக்காது. மசோதாவின் தலைப்பு மட்டும் வாசிக்கப்படும். இதுதான் மசோதாவின் 'முதல் வாசிப்பு' எனப்படுகின்றது.

இரண்டாவது வாசிப்பின்போது மசோதாவின் நோக்கங்களேயும் ஷரத்துக்களேயும்பற்றிய பொது விவாதமே நடைபெறும். அப்போது அங்கத்தினர்கள் மசோதாவை எதிர்க்கலாம்; அல்லது, மசோதாவின் நோக்கங்கள் மக்களின் நலத்திற்குப் பாதகமாயிருக்கின்றன வென்றோ, அதன் ஷரத்துக்கள் விரிவாக இல்லாததனுல் வேறொரு விரிவான மசோதா கொணரப்படவேண்டு மென்றோ, அம்மசோதாவைக் கொணர்வதற்கு அது தக்க சமயமன்று என்றோ அவர்கள் கருதினுல் மசோதாவை 'ஸெலெக்ட் கமிட்டி' எனப்படும் 'தனிக்கமிட்டி' யின் அல்லது, இரு சபைகளின் அங்கத்தினர் சிலரைக்கொண்ட 'கூட்டுக்கமிட்டி' யின் பரிசீலனேக்கு அனுப்பவேண்டு மென்றோ,மக்களின் கருத்தை அறிந்துகொள்ளும்பொருட்டு அதை வெளியிடவேண்டுமென்றோ அவர்கள் மாற்றுப் பிரேரணேகளேக்கொண்டு வரலாம். விவாதத்தின் இறுதி யில் சபாநாயகர் வாக்குப் பதிவு செய்வார். பெரும்பான்மை யான அங்கத்தினர்கள் அதை எதிர்த்தால் அது நிராகரிக் கப்பட்டது என அறிவிக்கப்படும்."

"மசோதாவைத் தனிக்கமிட்டியின் பரிசீலனேக் காகவோ, பொது மக்களின் கருத்தை அறிந்துகொள்வ தற்காகவோ எதற்காக அனுப்பவேண்டும்?" என வினவி ஞன் சேகர்.



*ஸெலெக்ட் கமிட்டி அலுவல் புரிகிறது.*

"மசோதாவை விரிவாகவும் நுட்பமாகவும் பரிசீலனை செய்யவேண்டுமெனச் சில அங்கத்தினர்கள் கருதலாம். முழுச் சபையைக்காட்டிலும் சில அங்கத்தினர்களே இருக்கும் தனிக்கமிட்டியே அதை நன்கு பரிசீலனை செய்வது எளிதாயிருக்கும்; அல்லது, மிகவும் முக்கிய மான மசோதாவாக இருந்தால் அதைச் சட்டமாக்குவதற்கு முன் மக்களின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்வது அவசியம் எனவும் அவர்கள் நினைக்கலாம்," என்று மறு மொழியளித்தார் கேசவன்.

"மாற்றுப் பிரேரணை நிறைவேற்றப்பட்டுவிட்டால் என்ன நடக்கும்?" எனக் கேட்டாள் நிர்மலா.

"மசோதா தனிக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டால் அக் கமிட்டி அதை நுணுக்கமாக ஆராய்ந்து தனது முடிவு களைச் சபைக்குச் சமர்ப்பிக்கும். மக்களின் கருத்தைத்

தெரிந்துகொள்ளும்பொருட்டு மசோதா பிரசுரிக்கப்பட்டால் பல்வேறு பகுதியினரின் அபிப்பிராயங்களைச் சேகரித்து அங்கத்தினர்களுக்குத் தெரியப்படுத்துவார்கள்."

"எனவே, சட்டங்களை இயற்றுவதில் மக்களுக்குப் பங்கு இருக்கின்றது என்று சொல்லுங்கள்," என்றான் சேகர்.

"ஆம். இதற்குப்பின்னர் மசோதாவின் ஒவ்வொரு ஷரத்தையும் சபை ஆராய்கின்றது. மசோதாவின் ஒவ்வொரு பகுதியும் ஷரத்து எனப்படுகின்றது. ஒவ்வொரு பகுதியும் தனித்தனியே பரிசீலிக்கப்படுகின்றது. இந்நிலையில் அங்கத்தினர்கள் ஷரத்துக்களுக்குத் திருத்தப் பிரேரணைகளைக் கொண்டுவரலாம்."

"திருத்தம் என்றால் என்ன ?" என்றாள் லீலா.

"மசோதாவின் ஒரு ஷரத்திற்கோ, ஒன்றுக்கு மேற்பட்ட ஷரத்துக்களுக்கோ கொண்டுவரப்பெறும் மாற்றம். அது வார்த்தைகளில் மட்டும் மாற்றத்தைக் குறிப்பதாயிருக்கலாம், அல்லது, அதன் கருத்தையே மாற்றுவதாயிருக்கலாம். இம்மாற்றம் சபையினால் ஏற்றுக்கொள்ளப்பட்டால் குறிப்பிட்ட ஷரத்து திருத்தப்பெறுகின்றது.

மசோதாவின் தலைப்பு உள்பட எல்லா ஷரத்துக்களையும் பரிசீலனை செய்தபிறகு, 'மூன்றாவது வாசிப்பு' நடைபெறும். மசோதாவை நிறைவேற்றலாம் என்று ஒரு தீர்மானம் கொணரப்படும். அதைப்பற்றி நடக்கும் விவாதம் மசோதாவின் பொதுக்கொள்கையை ஒட்டியதாகத்தான் இருக்கும். முழு மசோதாவும் 'ஓட்'டிற்கு, அதாவது, வாக்கெடுப்பிற்கு விடப்பெறும். பெரும்பான்மை அங்கத்தினர்கள் அதை அங்கீகரித்தால் சபாநாயகரோ, சபையின் அக்கிராசனரோ மசோதா நிறைவேற்றப்பட்ட

தாக அறிவிப்பார். அதன் பிரதி ஒன்றின்மீது சபா நாயகரோ, சபையின் அக்கிராசனரோ கையொப்பமிடு கின்றார்."

"மூன்றாவது வாசிப்பில் மசோதா நிறைவேற்றப்பட்டு விட்டால் அது சட்டமாகிவிடுமா?" என்றாள் லீலா.

"இல்லை, அதற்குள் ஆகிவிடாது. அது பார்லிமெண்ட்டின் மற்றொரு சபைக்கு அனுப்பப்படும். அங்கும் மூன்று வாசிப்புகள் நடந்தாகவேண்டும். இரு சபைகளிலும் அது நிறைவேற்றப்பட்டபிறகு ராஷ்ட்ரபதியின் கையொப்பம் பெறும்பொருட்டு அனுப்பப்படும். அவருடைய சம்மதம் கிடைத்தபிறகே அது 'சட்டம்' ஆகின்றது."

"மசோதாவை இரு சபைகளில் ஏதாவதொன்றில் கொண்டுவரலாமா?" என வினவினான் சேகர்.

"பணம் சம்பந்தமான அல்லது வரிகள் சம்பந்தமான மசோதாவைத் தவிர வேறெந்த மசோதாவையும் எந்தச் சபையிலாவது கொணரலாம்," என விடை பகர்ந்தார் கேசவன்.

"ஒவ்வொரு மசோதாவையும் ஏன் இரு சபைகளும் அங்கீகரிக்கவேண்டும்? ஏதாவதொரு சபை பரிசீலனை செய்து நிறைவேற்றினால் போதாதா?"

"சட்டம் என்பது நாட்டிலுள்ள ஆயிரக்கணக்கான மக்களைப் பாதிப்பது அல்லவா? எனவே, மிகுந்த கவனத்துடனும் அக்கரையுடனும் அது இயற்றப்பெறவேண்டும். ஒரு சபை மட்டுமே அதைப் பரிசீலனை செய்தால் அவசரமாகவும் நன்கு ஆலோசியாமலும் அதை நிறைவேற்றி விடலாம். இரண்டு சபைகள் இருப்பதால், ஒரு சபை கவனிக்காது விட்டுவிட்ட குறைபாடுகளை மற்றொரு சபை நீக்கிவிடலாம். அன்றியும், ஒரு சபையே இருந்தால் மக்களின் நலத்திற்கெதிராகவும் அது சட்டங்களை இயற்ற

லாம். இரண்டு சபைகள் இருப்பதால் ஒன்றை ஒன்று கண்காணித்துக்கொள்வது எளிதாயிருக்கிறது.''

இதற்குள்ளாக மசோதாவைப்பற்றிய விவாதம் முடிவடைந்தது. சபையின் அக்கிராசனர் மசோதாவை வாக்கெடுப்பிற்கு விட்டார். கேசவன் குழந்தைகளிடம், நடவடிக்கைகளைக் கவனமாகப் பார்க்கும்படி கூறினார். முதலில், அக்கிராசனர் எழுந்து "மசோதா நிறைவேற்றப் படலாமா என்பது கேள்வி. மசோதாவிற்குச் சாதகமாயிருப்போர் 'ஆம்' என்று கூறவும்,'' என்றார்; உடனே பலர் 'ஆம்' என உரக்கக் கூறினர். "அதை எதிர்ப்பவர்கள் 'இல்லை' என்று சொல்லவும்,'' என்று அக்கிராசனர் கூறியவுடன் பலர் 'இல்லை' என்று இரைந்தனர். சிறிது நேரம் சென்றவுடன் "மசோதாவை ஆதரித்தவர்களின் எண்ணிக்கை மிகுதியாக இருந்ததனால் மசோதா நிறைவேற்றப்பட்டதாக அறிவிக்கிறேன்,'' என்றார் சபையின் அக்கிராசனர். ஆனால், பல அங்கத்தினர்கள் அதை ஆட்சேபித்தனர்.

"என்ன நடக்கிறது?'' எனக்கேட்டான் சேகர்.

"குரல்-ஓட் அல்லது குரல்-வாக்கெடுப்பு எனப்படுவது இதுதான். பிரேரணையைப்பற்றிய விவாதம் முடிவடைந்ததும் அக்கிராசனர் அதைக் கேள்வி உருவத்தில் வாக்கெடுப்பிற்கு விடுகின்றார். சாதகமாக இருப்பவர்களை 'ஆம்' எனவும் பாதகமாக இருப்பவர்களை 'இல்லை' எனவும் கூறும்படி அவர் சொல்கிறார். எந்தக் குரல் மிகுதியாக ஓங்கியிருக்கிறது என்பதைக் கவனித்து அவர் முடிவு கூறுகிறார். ஆம், இல்லை என்று சொல்வதற்குப் பதிலாக அங்கத்தினர்களை அவர்களுடைய இடங்களில் எழுந்து நிற்குமாறும் அவர் சில சமயம் சொல்வதுண்டு.''

"ஆனல், இவர்கள் அக்கிராசனருடைய முடிவிற்கு ஆட்சேபம் கூறுகின்றனரே?" என்ருன் சேகர்.

"ஆம். அக்கிராசனர் இப்போது 'பிரிவு-எண்ணிக்கை' க்கு ஏற்பாடு செய்வார், அல்லது, 'ஆம்' என்று சொன்னவர்களையும் 'இல்லை' என்று சொன்னவர்களையும் அவரவர் இடங்களில் எழுந்து நிற்கச் சொல்வார். அடுத்து என்ன நடக்கின்றது என்பதைக் கவனி."

அக்கிராசனர் 'பிரிவு எண்ணிக்கை' என்று கூறுவதை அனைவரும் கேட்டனர். உடனே ஒரு மின்சார மணி தொடர்ந்து பார்லிமெண்ட் கட்டிடம் முழுவதும் சில நிமிஷங்களுக்கு ஒலித்தது.

"ஏன் மணி அடிக்கிறது?" என வினவினுள் லீலா,

"சபையில் இல்லாத அங்கத்தினர்களைக் கூப்பிடுவதற்காகத்தான். விவாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது சில அங்கத்தினர்கள் நூல் நிலையத்திற்கோ, ஆபீஸ் அறைகளுக்கோ சென்றிருக்கலாம். சபைக்கு அவர்கள் வரவேண்டும் என்பதற்காகவே பார்லிமெண்ட் கட்டிடம் முழுவதும் மணி அடிக்கப்படுகின்றது. மணி ஒலிப்பது நின்றவுடன் இடைவாயிலின் வெளிக்கதவுகள் எல்லாம் மூடப்பட்டுவிடும்; பிரிவு-எண்ணிக்கை முடிவுறும் வரை ஒருவரும் வெளியிலிருந்து உள்ளே செல்லவோ, உள்ளேயிருந்து வெளியே போகவோ அனுமதிக்கப்படமாட்டார். மணி ஒலிப்பது நின்று விடுவதற்குமுன் அங்கத்தினர்கள் உள்ளே வந்துவிடவேண்டும்; இல்லாவிடில் பிரிவு-எண்ணிக்கையில் அவர்கள் கலந்துகொள்ளமுடியாது."

சபையின் அக்கிராசனர் மீண்டும் ஒருமுறை கேள்வியைக் கூறி, 'ஆம்' என்பவர்கள் வலது பக்கமும் 'இல்லை' என்போர் இடது புறமும் போகவேண்டும் எனச் சொன்

ஞர். சிலர் வலது புறமாகவும் வேறு சிலர் இடது பக்க மாகவும் பிரிந்து சென்றனர்.

"அக்கிராசனருக்கு இரு புறத்திலும் இருக்கும் இரண்டு கதவுகளைக் கவனித்தீர்களா? ஒன்று, 'ஆம்' அங்கத்தினர்களின் அறையினுடையது; மற்றொன்று 'இல்லை,' அங்கத்தினர்களின் அறையினுடையது. ஒவ்வொரு பக்கத்திலும் பிரிவு-எண்ணிக்கை இலக்கத்தையும் அங்கத்தினர்களின் பெயர்களையும்கொண்ட ஜாபிதாக்களுடன் கணக்கெடுத்துச் சொல்லும் குமாஸ்தாக்கள் இருப்பார்கள். அங்கத்தினர்கள் குமாஸ்தாவின் முன்னிலையில் ஒருவர் பின் ஒருவராகச் செல்லும்போது தங்களது பிரிவு-எண்ணிக்கை இலக்கத்தைச் சொல்லவேண்டும். உடனே குமாஸ்தா அங்கத்தினரின் பெயருக்கெதிராக உள்ள எண்ணைக் குறியிட்டு அவருடைய பெயரை உரக்க வாசிப்பார். 'ஓட்' சரியாகப் பதிவு செய்யப்பெறுவதற்காகவே இம்முறை கையாளப்படுகின்றது. பிறகு, அங்கத்தினர் வெளியே போய்விடுவார். அங்கத்தினர்கள் அனைவரும் இங்ஙனம் 'ஓட்' பதிவு செய்தபின்னர், குமாஸ்தாக்கள் அந்த ஜாபிதாக்களைச் சபையின் காரியதரிசியிடம் கொடுத்துவிடுவார்கள். காரியதரிசி 'ஓட்'களைக் கணக்கிட்டு 'ஆம்' என்றோர், 'இல்லை' என்றோர் ஆகியோரின் மொத்த எண்களை சபையின் அக்கிராசனரிடம் சமர்ப்பிப்பார். அப்போது அக்கிராசனர் முடிவை அறிவிப்பார்."

"'ஆம்' என்போரின் எண்ணிக்கையும் 'இல்லை' என்போரின் எண்ணிக்கையும் சமமாக இருந்தால் என்ன செய்வார்கள்?" எனக் கேட்டான் சேகர்.

"அக்கிராசனருக்குத் 'தனி ஓட்' என்று ஒன்று உள்ளது. அதை எந்தப் பக்கத்தினருக்கு வேண்டுமானாலும் அவர் கொடுக்கலாம். அதற்கு 'நிர்ணய ஓட்' எனப் பெயர்.

மற்ற அங்கத்தினர்களுக்கு இருப்பதைப்போல் அக்கிரா சனருக்குச் 'சாதாரண ஓட்' கிடையாது. இரு பக்கங்களின் வாக்குகளும் சமமாக இருக்கும் போதுதான் அவருக்கு 'ஓட்' செய்யும் உரிமையுண்டு."

" இவ்விவரங்கள் யாவும் அறிவைப் பெருக்குவன வாகவே உள்ளன," என்று செப்பினுன் சேகர்.

சென்ற சில நாட்களில் அவன் பார்த்தவற்றையும் தெரிந்துகொண்ட விஷயங்களேயும் குறித்து அவன் பெருமிதம் அடைந்தான்; அவன் இதழ்களில் தவழ்ந்த இளமுறுவலே அதற்குச் சான்றுபகர்ந்தது.

" நம் நாட்டு மக்களின் பிரதிநிதித்துவ சபையாகவும் அவர்களுடைய சம்பூரண அதிகாரத்தின் சின்னமாகவும் விளங்கும் நமது பார்லிமெண்ட்டைப்பற்றி நீங்கள் பல விவரங்களேத் தெரிந்துகொண்டீர்கள். வாருங்கள், வீட்டிற் குப் போகலாம்," என்ருர் கேசவன்.

" திருவனந்தபுரம் திரும்பியதும் இவ்விவரங்கள் யாவற்றையும் எனது நண்பர்களிடம் சொல்லுவேன்," என்று மகிழ்ச்சியுடன் மொழிந்தாள் லீலா.

" ஆனல் இங்கே அங்கத்தினராக வருவதையே நான் பெரிதும் விரும்புகிறேன்," என்று தனது விருப்பத்தை வெளியிட்டான்.

" நானும் அங்கத்தினர் ஆகவே ஆசைப்படுகிறேன்," என்ருள் லீலா.

## விஞக்கள்

1. ராஜ்யசபை அங்கத்தினர்கள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்?

2. மசோதா எப்போது சட்டம் ஆகின்றது?

3. மசோதா ஏன் சிலசமயம் ஒரு கமிட்டியின் பரிசீலனைக்கோ, பொது மக்களின் கருத்தையறியும் பொருட்டோ அனுப்பப்படுகிறது?

4. மசோதாவிற்குத் திருத்தம் என்ருல் என்ன?

5. மசோதா ஏன் பார்லிமெண்ட்டின் இரு சபைகளாலும் நிறைவேற்றப்படவேண்டும்?

6. விளக்குக : " 'ஆம்' என்போர் அதை அடைகின்றனர் என்று நினைக்கிறேன்."

7. பிரிவு–எண்ணிக்கை எப்போது அவசியமாயிருக்கின்றது? அது நடைபெறும் முறை யாது?

